

# நாளுக்கு நாள்

## அதிக தெளிவான,

## எழிலோங்கும் சருமம்



ரெக்ஸோனாவிலுள்ள **கேடில்** இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்

ரெக்ஸோனாவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத் தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும் தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள்.






# ரெக்ஸோனா

## கேடில்* கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு ஊட்டமளித்து பிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP 107-50 TM

ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

கல்கி

# பொருளடக்கம்

மலர் 12
இதழ் 39

**1953 ஏப்ரல் 26**

விஜய ௵
சித்திரை 14௳



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


ஜூபிடர்-
லாவண்யா
இப்பொழுது
நடைபெறுகிறது
மனிதன்
சென்னை
ஸ்ரீ கிருஷ்ணா..சித்ரா
நூர்ஜஹான்
(சைதாப்பேட்டை)
மற்றும் தென்னாடெங்கும்
நடைபெறுகிறது!
டைரக்ஷன்
K.ராம்நாத்
ஸ்டுடியோ
நெப்ட்யூன்

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 39

# துவேஷ விதை மரம் ஆகிறது!

இந்தியாவின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு சில தினங்களுக்கு முன் புது டில்லியில் நடந்த பொதுக் கூட்டத்தில் சில முக்கிய விஷயங்களை வெளியிட்டார்.

அப்போது அவர் பாகிஸ்தானில் நிகழ்ந்து வரும் சம்பவங்களைப் பற்றிப் பட்ட வர்த்தனமாகக் குறிப்பிட்டார்.

பாகிஸ்தானில் உள் நாட்டுக் குழப்பமும் கலகமும் குமுறிக் கொண்டிருக்கிறது என்று கூறினார்.

வகுப்பு வேற்றுமையையும் துவேஷத்தையும் அடிப்படையாகக் கொண்டு பாகிஸ்தான் ஏற்பட்டது அல்லவா? அதன் விபரீத பலன்களை இப்போது பாகிஸ்தான் மக்கள் அனுபவிக்கத் தொடங்கி யிருக்கிறார்கள் என்றார் ஜவாஹர்லால்ஜி.

இந்தியாவைப் போல் பாகிஸ்தான் மதக் கலப்பற்ற அரசியல் திட்டத்தை வகுத்துக் கொண்டிருக்குமாயின், அங்கே இவ்வளவு துவேஷமும் மாற்சரியமும், குழப்பமும் கலகமும் ஏற்பட்டிரா என்று பாகிஸ்தான் மக்களே அபிப்பிராயப் படுகிறார்கள் என்றும் அவர் குறிப்பிட்டார்.

பாகிஸ்தான் உள்நாட்டுப் பிரச்னைகளைப் பற்றி ஜவாஹர்லால்ஜி கூறியது நூற்றுக்கு நூறு உண்மை என்பது அவர் பேசிய இரண்டு மூன்று நாட்களுக்குள் நன்கு வெளியாகி விட்டது.

பாகிஸ்தானின் உள்நாட்டுக் குமுறல் உச்ச ஸ்தானத்தை அடைந்திருக்கிறது என்பதற்கு, "பாகிஸ்தான் பிரதம மந்திரி காஜா நாஜிமுதீன் 'டிஸ்மிஸ்' செய்யப்பட்டார்" என்ற திடுக்கிடும் செய்தியைக் காட்டிலும் வேறு என்ன உதாரணம் வேண்டும்?

பாகிஸ்தானில் எழுந்துள்ள பிரச்னைகளைச் சமாளிக்கும் திறமை நாஜிமுதீனுக்கு இராததாலேயே, அவரைப் பிரதம மந்திரி பதவியிலிருந்து விலக்கி யிருப்பதாகப் பாகிஸ்தான் கவர்னர் ஜெனரல் குலாம் முகமது கூறுகிறார்.

காஜா நாஜிமுதீன் ஜனாப் ஜின்னாவுக்குப் பிறகு மூன்று வருஷகாலம் பாகிஸ்தான் கவர்னர் ஜெனரலாகப் பதவி வகித்தார். அதன்பின் சென்ற ஒன்றரை வருஷங்களாகப் பாகிஸ்தான் பிரதம மந்திரியாக இருந்து வருகிறார்.

எனவே அவரது திறமை இப்போது திடீரென்று குன்றி விட்டதாகக் கூறுவது விந்தையான வாதம் அல்லவா?

காஜா நாஜிமுதீன் பாகிஸ்தான் முஸ்லிம் லீகின் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர். பாகிஸ்தான் பார்லிமெண்டில் மேற்படி கட்சி மிகப் பெரும்பான்மையான ஸ்தானங்களைப் பெற்றிருக்கிறது.

அப்படி யிருந்தும், பார்லிமெண்டில் பெரும்பான்மையோர் ஆதரவு பெற்றவரான பிரதம மந்திரியை, அவரால் சிபார்சு செய்யப்பட்டுக் கவர்னர் ஜெனரல் பதவிக்கு வந்த மனிதர் 'டிஸ்மிஸ்' செய்து விட்டார். இதிலிருந்து பாகிஸ்தான் அரசியல் நிலைமை எவ்வளவு தூரம் குழம்பிக் கிடக்கிறது என்பதைக் கற்பனை செய்து கொள்ளலாம்.

* * * *

பாகிஸ்தானில் ஏற்கெனவே மேற்கு பஞ்சாபத்திலும், சிந்து மாகாணத்திலும் பிரதமர்கள் விலக்கப்பட்டது உண்டு.

அதற்குக் காரணம் நிர்வாக ஊழலும் பாகிஸ்தான் தலைவர்களிடையே நிலவி வரும் கட்சி மாற்சரியமும்தான்.

பாகிஸ்தான் இராணுவத்தின் பிரதம நிர்வாகத் தலைவரே பாகிஸ்தானுக்கு விரோதமாகச் சதி செய்ததாய் வழக்கு நடந்து அவர் தண்டிக்கப்பட்டதை இதற்குள் யாரும் மறந்திருக்க முடியாது.

வகுப்பு வேற்றுமையையும் துவேஷத்தையும் அடிப்படையாகக் கொண்டே பாகிஸ்தான் உருவாயிற்று. அவற்றை அடிப்படையாகக் கொண்டே பாகிஸ்தான் அரசியல் முளை விட்டு, செடியாகி, மரமாகி வருகிறது.

பாகிஸ்தான் தலைவர்கள் உள்நாட்டுக் கொந்தளிப்பை மறைப்பதற்காக இந்தியாமீது இடைவிடாது புகார் கூறி வந்தார்கள்; இந்தியாவுக்கு விரோதமாகப் பொய்ப் பிரசாரம் செய்தார்கள்.

தங்களுக்கு நேர்ந்துள்ள இன்னல்களுக்கெல்லாம் காரணம் தங்கள் தலைவர்களுடைய துவேஷ புத்தி அல்ல; இந்தியாவின் விரோத நடவடிக்கைகள்தான் என்று பாகிஸ்தான் மக்கள் நம்பும்படி செய்வதற்காகப் பாகிஸ்தான் தலைவர்கள் அகடவிகட சாமர்த்தியம் செய்து வந்தார்கள்.

பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகளுடன் பாகிஸ்தான் கொண்டுள்ள நட்போ, இந்தியாவுக்கு விரோதமாகப் பாகிஸ்தான் செய்து வரும் துவேஷப் பிரசாரமோ அந்த நாட்டுப் பிரச்னைகளைத் தீர்க்க முடியாது என்ற உண்மையை அங்கு நிகழ்ந்துள்ள சம்பவங்கள் நிரூபித்திருக்கின்றன.

நாஜிமுதீன் ஸ்தானத்தில் பிரதம மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டுள்ள ஜனாப் முகமது அலியும், சென்ற வாரம் வரையில் புதுடில்லியில் பாகிஸ்தான் ஸ்தானிகராக இருந்து புதிய மந்திரி சபையில் இடம் பெற்றுள்ள ஜனாப் குரேஷியும் இந்தியாவுடன் நெருங்கிய நட்பு வைத்துக் கொள்வதே தங்கள் நோக்கம் என்று குறிப்பிட்டுள்ளனர்.

எனவே, பாகிஸ்தான் தலைவர்கள் இனி மேலாவது துவேஷப் பிரசாரத்தைக் கைவிட்டுப் பாகிஸ்தான்—இந்தியா நட்புக்கு அடிகோலுவார்களாயின், பாகிஸ்தானையும் இந்தியாவையும் அல்லல்படுத்திவரும் பல பிரச்னைகள் தீர வழி உண்டாகும்.

# திருத்தணி முருகனும் விநாயகரும்

பத்திரிகைகளில் இப்போதெல்லாம் ஸ்ரீ கே. விநாயகம், எம்.எல்.ஏ. அவர்களின் பெயரை அடிக்கடி பார்க்கிறோம். ஸ்ரீ சிவஞான கிராமணியாரின் பெயருடனே சேர்ந்து அவருடைய பெயரும் வெளியாகி வருகிறது. முக்கியமாக, திருத்தணி வட்டாரங்களில் நடக்கும் பொதுக் கூட்ட விவரங்களில் அவர் முக்கிய பங்கு கொண்டு வருகிறார்.

பிறக்கும் போதே எட்டேமுக்கால் லட்சணத்துடனும் என்பதே முக்கால் கோணல்களுடனும் பிறந்த பிரஜா கட்சியைச் சேர்ந்தவர் ஸ்ரீ கே. விநாயகம் அவர்கள். இந்தக் கட்சியின் தலைவராகிய ஆந்திர கேசரி டி. பிரகாசம் "மதராஸ் மனதே" என்ற கோஷத்துடன் சென்னை நகருக்கு வந்து தேர்தலுக்கு நின்று தோற்றுப் போனதுடன் டெபாஸிட்டையும் இழந்தார். இதற்குப் பிறகும் ஐ. ஐ. மு. என்னும் கபந்தக் கட்சியைச் சிருஷ்டித்து அதற்கு ஸ்ரீ பிரகாசத்தையே தலைவர் ஆக்கினார்கள். தலைவர் பிரகாசம் கபந்தக் கட்சியின் வயிற்றிலே அமுங்கி, 'வாயை 'ஆ' என்று திறந்து, சென்னையை விழுங்கப் பார்த்தார். அது முடியவில்லை. பிறகு, கபந்தக் கட்சியிலிருந்து பிரிந்து, ஒட்டுப்போட்ட பிரஜா-சோஷலிஸ்ட் கட்சிக்குத் தலைவராகப் போனார்.

இத்தகைய பிரஜா கட்சியிலும் ஐ. ஐ. மு. கட்சியிலும் சேர்ந்திருந்த தமிழர்களிலே ஒருவர் ஸ்ரீ கே. விநாயகம். அவர் தாம் முன்னம் செய்த தவறுகளுக்குப் பிராயச்சித்தமாகத் திருத்தணி முருகனைப் போய்க் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார். சித்தூர் ஜில்லாவில் இப்போது சேர்ந்துள்ள திருத்தணி முதலிய தமிழர் வாழும் பிரதேசங்களைத் தமிழ் நாட்டில் சேர்ப்பதற்காகக் கிளர்ச்சி நடத்தி வருகிறார்.

திருத்தணியில் வாழும் தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமான் தமிழில் வைதாரையும் வாழ்விப்பவர். ஆகையால், ஸ்ரீ கே. விநாயகத்தின் பழைய தவறுகளை மறந்து அவருடைய இப்போதைய முயற்சிக்கு ஆக்கமளித்து அருள் புரிவார் என்று எதிர்பார்க்கலாம்.

புராண வரலாறுகளின் பிரகாரம், திருத்தணி மலைச் சாரலிலேதான் முருகன் வள்ளியைத் தேடிக் கொண்டு வந்தார். திருத்தணியிலேதான் தமிழ்க் கடவுளுக்கும் தமிழ் மகளுக்கும் திருமணம் நடந்தது. அந்தத் திருமணம் நடப்பதற்குப் பழைய விநாயகர் (முருகனுடைய மூத்த சகோதரரான விநாயகர்) மிக்க உதவி புரிந்ததுண்டு. இந்தக் காரணத்தை முன்னிட்டேனும் திருத்தணி முருகப் பெருமான் நமது காலத்து ஸ்ரீ கே. விநாயகம் எம். எல். ஏ. அவர்களின் முயற்சிக்கு ஆசி கூற வேண்டும் அல்லவா!

ஆந்திர மாகாணப் பிரிவினை சம்பந்தமான கிளர்ச்சியில் தமிழர்களின் மிக முக்கியமான பிரச்னை சென்னை நகரமாக இருந்தது. அந்தப் பிரச்னை இப்போது ஒருவாறு நல்லபடியாக முடிவடைந்தது. (ஆந்திர கேசரியின் மொழு கட்டிய ஒற்றைக் குரல் பல்லவியை நாம் இனிப் பொருட்படுத்த வேண்டியதில்லை.)

சென்னைக்கு அடுத்தபடியாக, சித்தூர் ஜில்லாவில் தமிழர்கள் மிகப் பெரும்பான்மையாக வாழும் திருத்தணி முதலிய பிரதேசங்களின் வருங்காலம் மிக மிக நமக்கு முக்கியமானவை. ஆந்திர மாகாணம் தனியாகப் பிரியும் சந்தர்ப்பத்தில் இந்திய அரசாங்கத்தார் எல்லைக் கமிஷன் ஒன்று நியமிப்பார்கள். அக் கமிஷனுடைய விசாரணை முடிவில் சித்தூர் ஜில்லாவிலுள்ள தமிழர் வாழும் பிரதேசங்களின் நிலைமை தெளிவாக்கப்படும்.

ஆனால், எல்லைக் கமிஷன் நியமிக்கப்படும் வரையில் சித்தூர் ஜில்லா தமிழர்கள் தூங்கிக் கொண்டிருக்கக் கூடாது. சென்னை நகர் சம்பந்தமாக முன் முயற்சி செய்யத் தவறித் தூங்கிவிட்டதன் பலனைத்தான் ஒரு முறை பார்த்து அநுபவித்தாகி விட்டதே! ஆகையால் சித்தூர் ஜில்லா தமிழர்கள் இப்போதிருந்தே தமிழகத்துடன் சேர்வதற்குச் செய்யவேண்டிய முயற்சிகளைச் செய்து கொண்டிருக்க வேண்டியது மிகவும் அவசியம்.

இந்த மிக முக்கியமான கிளர்ச்சிக்குத் தலைமை வகித்து நடத்திவரும் ஸ்ரீ கே. விநாயகம் எம். எல். ஏ. அவர்களையும், ஸ்ரீ கிராமணியாரையும், மற்றும் தமிழரசுக் கழகத் தொண்டர்களையும் பாராட்டி வாழ்த்துகிறோம். அவர்களுடைய முயற்சிக்கு வெற்றி அளிக்க வேண்டும் என்று திருத்தணி முருகனை வேண்டுகிறோம்.

விஜயவாடா முதலிய இடங்களில் நம் ஆந்திர சகோதரர்கள் கையாண்ட சட்டத்துக்குப் புறம்பான முறைகளை மட்டும் நம் சித்தூர் ஜில்லா தமிழ் சகோதரர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் கடைப்பிடிக்கக் கூடாது. நேர்மையற்ற அக்கிரமமான முறைகளைக் கையாண்டு காரியசித்தி அடைந்தாலும் அது நீடித்து நின்று பயன் தராது. இதற்கு நிதரிசனமாக உதாரணத்தைப் பாகிஸ்தானில் இன்று காண்கிறோம்; ஆந்திர ராஜ்யத்திலும் காணக் காணப்போகிறோம்.

தமிழ் மக்கள் தங்கள் பூர்வீகமான உயர்ந்த பண்பாட்டுக்குரிய வழிகளையே கடைப் பிடித்து நடக்க வேண்டும். இந்த வழிகளில் வெற்றி கிட்டுவது சிறிது தாமதப்பட்டாலும், கிடைக்கும் வெற்றி நீடித்து நின்று பலன் தருவது நிச்சயம்.

# மழை பொழிந்தது! மன்றம் பொலிந்தது!

தமிழ் நாட்டின் தென் பகுதியில் சக்கைப் போடாக மழை பொழிந்து ஏரி குளங்கள் நிறைந்து மக்கள் உள்ளங்கள் குளிர்ந்து வருகின்றன என்று அறிகிறோம்.

சென்னை நகரிலும் சென்ற வாரத்தில் சேர்ந்தாற்போல் ஐந்து நாள் மழை பொழிந்தது; இடி இடித்தது; மின்னல் மின்னியது; வெள்ளம் பெருகியது; மன்றம் பொலிந்தது; மக்கள் மிதந்தார்கள்.

தமிழிசைச் சங்கத்தார் புதிதாக நிர்மாணித்திருக்கும் அழகிய அண்ணாமலை மன்றத்தில் பொழிந்த இசை மழையைக் குறிப்பிடுகிறோம். வாய்ப்பாட்டு வித்வான்களும் நாதஸ்வர வித்வான்களும் இசை மழையைப் பொழிந்தார்கள். மிருதங்கம், கடம், தவுல் வாத்தியங்கள் இடி முழக்கமென ஒலித்தன. அண்ணாமலை மன்றத்தின் தீபாலங்காரம் மின்னல் ஒளி எனத் திகழ்ந்தாலும் கண்ணைப் பறிக்கவில்லை,—கண்களைக் குளிர்வித்தது. இசை மழை வெள்ளமாகப் பெருகி அண்ணாமலை மன்றத்தையே முழுக அடித்து விட்டது; ஆனால், மன்றத்துக்கு அதனால் அபாயம் ஏற்படவில்லை; அஸ்திவாரம் உறுதிப்பட்டு மண்டபம் கெட்டிப்பட்டது. இசைப் பிரியர்களான மக்கள்,—மன்றத்துக்குள்ளேயும் வெளியிலும் இருந்து கச்சேரிகளைக் கேட்டவர்கள்,—ஆனந்த வெள்ளத்தில் மிதந்தார்கள்.

தமிழிசை விழா நடந்த ஐந்து தினங்களும் இப்படிக் கோலாகலமாகவே இருந்தது. புதிய விஜய வருடம் தமிழர்களுக்கு மிக நல்ல முறையில் ஆரம்பமாகியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

* * *

தமிழிசை விழாவை ஆரம்பித்து வைத்த ராஜாஜி அவர்கள் வழக்கம் போல் அருமையான உதாரணம் ஒன்று சொன்னார்கள்.

சாதம் சமைப்பதற்காக அடுப்பில் பானையை ஏற்றித் தண்ணீரை விட்டு அரிசியையும் போட்டால், முதலில் கொஞ்சநேரம் தளபள தளபள என்று சத்தம் கேட்டுக் கொண்டிருக்கும். சாதம் வேகத் தொடங்கிய பிறகு தளபள சத்தம் குறைந்து அடக்கமான இனிய ஓசை கேட்கத் தொடங்கி விடும்.

இதுபோலவே, சென்ற பதினெட்டு வருடங்களுக்கு முன்னதாகவே ஆரம்பித்த தமிழிசை இயக்கத்தின் ஆரம்பத்தில் சத்தம் அதிகமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. சண்டை சச்சரவுகளும் காரசாரமான விவாதங்களும் நடந்தன. அவையெல்லாம் இப்போது ஓய்ந்து விட்டன. தமிழிசை இயக்கம் பக்குவமடையும் நிலைக்கு வந்து விட்டது. ஆகையால், செவிக்கினிய இசை ஓசை மட்டும் இப்போது கேட்டு வருகிறது.

இவ்விதம் ராஜாஜி குறிப்பிட்டு, தமிழிசை இயக்கத்தை வாழ்த்தி ஆசீர்வதித்து, அண்ணாமலை மன்றத்தில் இந்த ஆண்டின் தமிழிசை விழாவை ஆரம்பித்து வைத்தார்கள்.

விழாவின் முதல் இரண்டு தினங்களிலும் அண்ணாமலை மன்றத்தில் கூடியிருந்த சபையின் அமைப்பு ராஜாஜியின் கூற்றை நன்கு நிரூபித்தது.

சென்னை ராஜ்ய கவர்னர் கனம் ஸ்ரீ பிரகாசா, பிரதம நீதிபதி கனம் ராஜமன்னார், மியூஸிக் அகாடமி தலைவர் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயர், உப தலைவர் கனம் நீதிபதி டி. எல். வெங்கட்ராமய்யர், "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸி. ஆர். சீனிவாசன் போன்ற பிரமுகர்களுடன் மாஜி மந்திரி ஸ்ரீ கோபால ரெட்டி, ஸ்ரீ புல்லா ரெட்டி போன்ற ஆந்திர சங்கீத ரஸிகர்களும் ஸ்ரீ முசிரி சுப்பிரமண்ய அய்யர், ஸ்ரீ செம்மங்குடி சீனிவாசய்யர் போன்ற சங்கீத கலாசிகர்களும் தமிழிசை விழாவுக்கு விஜயம் செய்து சிறப்பித்தார்கள்.

தமிழிசை இயக்கம் இனி விவாதத்துக்கு இடமில்லாத சிறந்த முறையில் வளர்ந்தோங்கும் என்பதற்கு வேறு அத்தாட்சி வேண்டியதில்லை.

* * *

இந்த ஆண்டில் இந்தியக் குடியரசு சர்க்காரின் ஆஸ்தான சங்கீத வித்வானாக விளங்கும் ஸ்ரீ செம்மங்குடி சீனிவாசய்யர் விழாவின் இரண்டாவது நாளில் அமோகமான கச்சேரி செய்தார். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, தமிழிசைச் சங்கத்தார் ஸ்ரீ செம்மங்குடி சீனிவாசய்யருக்கு ஸ்ரீ கோபால ரெட்டியாரைக் கொண்டு பொன்னாடை போர்த்திக் கௌரவித்ததைப் பாராட்டுகிறோம். தமிழிசை இயக்கத்தை நடத்துவோரின் உயர்ந்த பண்பாட்டுக்கு இந்நிகழ்ச்சி ஒரு சிறந்த அறிகுறியாக விளங்கியது.

* * *

எதிர்பார்த்த அளவுக்கு மேலாகவே சிறப்புடன் நடைபெற்ற தமிழிசை விழாவின்போது இரண்டு முக்கியமான பிரமுகர்கள் வரக்கூடாமற் போயிற்று. ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும், திரு ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களும் தமிழிசை இயக்கத்துக்கு இரண்டு சிறந்த அச்சாணி போன்றவர்கள். உடல் நலக் குறைவினால் அவர்கள் இருவரும் விஜயம் செய்ய முடியாமற் போனதுதான் விழாவுக்கு ஒரு பெருங் குறையாக இருந்தது. விரைவில் அவர்கள் இருவரும் உடல் நலம் பெற்று அடுத்த விழாவுக்கு அவசியம் விஜயம் செய்யக் கூடியவர்களாக வேண்டுமென்று இறைவனை வேண்டுகிறோம்.

* * *

ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தமது பெயரால் விளங்கும் மன்றத்தில் தமிழிசைப் பொழிவைக் கேட்க விஜயம் செய்யவில்லை என்பதாக நாம் சொல்ல முடியவில்லை. ராஜா ஸர் அவர்கள் தமது வாணாளெல்லாம் போற்றி வணங்கிய ஸ்ரீ நடராஜப் பெருமானை தில்லைப்பதியிலிருந்து ஐந்து நாள் விடைபெற்றுக் கொண்டு வந்து அண்ணாமலை மன்றத்தில் ஆனந்த நடனம் ஆடியிருக்க வேண்டும். அப்படியிருக்கும் போது, ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் வானுலகிலிருந்து அந்த ஐந்து நாளும் வந்திருந்து தமிழிசை அமுதத்தை அருந்தி மகிழ்ந்திருப்பார் என்றே கருதுகிறோம்.

தங்கள் அருமைத் தந்தையார் அங்கு விஜயம் செய்திருப்பதாகவே நம்பியவர்களைப் போல் ராஜா சர் முத்தையா செட்டியாரும், திரு சிதம்பரம் செட்டியாரும் பயபக்தியுடனும் பக்தி சிரத்தையுடனும் விழாவை நடத்தி வைத்தார்கள். அவர்களுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்வதுடன், இவ்வாறே சிறந்த முறையில் தமிழ் இசை விழாக்கள் நிரந்தரமாக நடைபெறுவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

மணியம்

## அத்தியாயம் 11

## மண்டபம் விழுந்தது!

மின்னல் வெளிச்சத்தில், அங்கே நின்று பேசியவர்கள் இருவருடைய தோற்றங்களையும் பழுவேட்டரையர் ஒரு கணம் பார்த்துத் தெரிந்து கொண்டார். அவர்களில் ஒருவனாகிய ரவிதாஸனை இரண்டொரு தடவை அவர் தமது அரண்மனையிலேயே பார்த்ததுண்டு. அவன் மந்திர வித்தைகளில் தேர்ந்தவன் என்று நந்தினி கூறியதுண்டு. அவருடைய சகோதரன் காலாந்தக கண்டன் இந்த மந்திரவாதியைப் பற்றியே தான் சந்தேகப்பட்டு அவரை எச்சரித்திருக்கிறான். இன்னொருவன், கடம்பூர் அரண்மனையில் வேலனாட்டம் ஆடிய தேவராளன். அவனைத் தாம் பார்த்தது அதுதானா முதல் தடவை? அவனுடைய உண்மைப் பெயர் என்ன?...... அப்படியும் ஒரு வேளை இருக்க முடியுமா? ...... நெடுங்காலத்துக்கு முன்பு அவரால் அரசாங்க உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்ட பரமேச்சுவரனா அவன்?......

இருக்கட்டும்; இவர்கள் மேலும் என்ன பேசுகிறார்கள் கேட்கலாம்.

"ரவிதாஸா! நீ இப்படித்தான் வெகு காலமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாய். 'நாள் நெருங்கி விட்டது' 'யமன் நெருங்கி விட்டான்' என்றெல்லாம் பிதற்றுகிறாய்! யமன் வந்து யார் யாரையோ கொண்டுபோகிறான்! ஆனால் மூன்று வருஷங்களாகப் படுத்த படுக்கையாய்க் கிடக்கும் சுந்தர சோழனைக் கொண்டு போவதாக இல்லை. அவனுடைய குமாரர்களையோ யமன் நெருங்குவதற்கே அஞ்சுகிறான். ஈழ நாட்டில் நாம் இரண்டு பேரும் எத்தனையோ முயன்று பார்த்தோமே?......"

"அதனால் குற்றமில்லை, அப்பனே! யமதர்மராஜன் உன்னையும் என்னையும் விடப் புத்திசாலி! மூன்று பேரையும் ஒரே தினத்தில் கொண்டு போவதற்காக இத்தனை காலமும் காத்துக் கொண்டிருந்தான். அந்தத் தினம் நாளைக்கு வரப் போகிறது. நல்ல வேளையாக, நீயும் இங்கே வந்து சேர்ந்தாய்! சரியான யமதூதன் நீ! ஏன் இப்படி நடுங்குகிறாய்? கொள்ளிட வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டாயா? படகு கொண்டு வந்து வைத்திருக்கிறாய் அல்லவா?"

"வைத்திருக்கிறேன். ஆனால் படகை வெள்ளமும் காற்றும் அடித்துக்கொண்டு போகாமல் காப்பாற்றுவது பெரும் பாடாய்ப் போய் விட்டது! உன்னை எத்தனை நேரம் எங்கெல்லாம் தேடுவது? ......ரவிதாஸா! ஏன் என் உடம்பு நடுங்குகிறது என்று கேட்டாய் அல்லவா? சற்று முன்னால், யமதர்ம ராஜனை நான் நேருக்கு நேர் பார்த்தேன். இல்லை, இல்லை; யமனுக்கு அண்ணனைப் பார்த்தேன். அதனால் சற்று உண்மையிலேயே பயந்துபோய் விட்டேன்......"

"பரமேச்சுவரா! என்ன உளறுகிறாய்? யமனாவது, அவன் அண்ணனாவது? அவர்களைக் கண்டு உனக்கு என்ன பயம்? அவர்கள் அல்லவோ உன்னைக் கண்டு அஞ்ச வேண்டும்?"

ரவிதாஸன மற்றவனைப் 'பரமேச்சுவரன்' என்று அழைத்ததும் பழுவேட்டரையர் துணுக்குற்றார். தாம் சந்தேகப்பட்டது உண்மையாயிற்று! யமதர்மனுடைய அண்ணன் என்று அவன் குறிப்பிட்டது தம்மைத்தான் என்பதையும் அறிந்து கொண்டார். அவனை உடனே நெருங்கிச் சென்று கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொல்ல வேணுமென்று அவர் உள்ளமும் கைகளும் துடித்தன. மேலும் அவர்களுடைய பேச்சைக் கேட்க வேணும் என்ற ஆவலினால் பொறுமையாக இருந்தார். நந்தினியைப் பற்றி அவர்கள் இன்னும் பேச்சு எடுக்கவில்லை. சுந்தரசோழரின் குடும்பத்துக்கே நாளை யமன் வரப்போகிறான் என்று மந்திரவாதி கூறியதன் கருத்து என்ன? உண்மையிலேயே ஜோதிடம் பார்த்துச் சொல்லுகிறானோ? இவனுடைய மந்திர சக்தியைப் பற்றி நந்தினி கூறியதெல்லாம் உண்மைதானோ? ஒருவேளை இவன் கூறுகிறபடி தெய்வாதீனமாக நடந்து விட்டால்?......தம்முடைய நோக்கம் நிறைவேறுவது எளிதாகப் போய் விடும்! சோழ சாம்ராஜ்யத்தைப் பங்கிடு செய்ய வேண்டிய அவசியம் ஏற்படாது! ஆனால் இந்தப் பரமேச்சுவரன்?...... இவனுக்கு என்ன இந்த விஷயத்தில் கவலை? ஆம்; ஆம்; இருபது வருஷங்களுக்கு முன்னால் 'சோழ குலத்தையே அழித்து விடப் போகிறேன்' என்று சபதம் செய்து விட்டுப் போனவன் அல்லவா இவன்?......ஆகா! தம்மைப் பற்றித்தான் அவன் ஏதோ பேசுகிறான்! என்ன சொல்லுகிறான் என்று கேட்கலாம்!

"நீ என்னிடம் சொல்லியிருந்தபடி இன்று காலையே இங்கு நான் வந்தேன். ஆனால் உன்னைக் காணவில்லை. காற்றிலும் மழையிலும் அடிபட்டு எங்கேயாவது சமீபத்தில் ஒதுங்கி இருக்கிறாயா என்று சுற்றுப்புறமெல்லாம் தேடி அலைந்தேன். கொள்ளிடத்து உடைப்புக்கு அருகில் ஒரு சிறிய கோவில் இருக்கிறது. அதில் யாரோ படுத்திருப்பது போலத் தோன்றியது. ஒருவேளை நீதான் அசந்து தூங்குகிறாயோ என்று அருகில் போய்ப் பார்த்தேன் ... யாரைப் பார்த்தேன் என்று நினைக்கிறாய்? சாக்ஷாத் பெரிய பழுவேட்டரையனைத்தான்!..."

மந்திரவாதி ஹா ஹா ஹா என்று உரத்துச் சிரித்தான். அதைக் கேட்ட வனத்தில் வாழும் பறவைகள் 'கிறீச்' 'கிறீச்' என்று சத்தமிட்டன. ஊமைக் கோட்டான்கள் உறுமின.

"பழுவேட்டரையனைப் பார்த்தாயா? அல்லது அவனுடைய பிசாசைப் பார்த்தாயா?" என்று ரவிதாஸன் கேட்டான்.

"இல்லை; பிசாசு இல்லை. குப்புறப் படுத்திருந்தவனைத் தொட்டுப் புரட்டிப் போட்டு முகத்தை நன்றாக உற்றுப் பார்த்தேன். ரவிதாஸா! யமனுக்கு அண்ணன்கள் இரண்டு பேர் இருக்க முடியுமா? பழுவேட்டரையனைப் போலவே, அதே முகம், அதே மீசை, அதே காய வடுக்கள் — இவற்றுடன் இன்னொரு மனிதன் இருக்க முடியுமா?"

"நீ பார்த்தவன் பழுவேட்டரையன் தான்! சந்தேகமில்லை. நேற்று மாலை பழுவேட்டரையன் படகில் ஏறிக்கொள்ளிடத்தைத் தாண்டிக் கொண்டிருந்தான். கரையருகில் வந்தபோது படகு காற்றினால் கவிழ்ந்து விட்டது. அவனுடைய பரிவாரங்களில் தப்பிப் பிழைத்துக் கரை யேறியவர்கள் இப்போது கூடக் கொள்ளிடக் கரையோரமாகப் பழுவேட்டரையனைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அவன் வெள்ளத்தில் மூழ்கிச் செத்துப் போயிருக்கலாம் என்று சந்தேகப்படுகிறார்கள். உடைப்பு வரையில் போய்ப் பார்த்து விட்டு அவர்கள் திரும்பி வரும்போது பேசியதை நான் கேட்டேன். ஆகையால், நீ பார்த்தவன் பழுவேட்டரையனாகவே இருக்கக்கூடும். ஒருவேளை அவனுடைய பிரேதத்தைப் பார்த்தாயோ, என்னமோ!"

"இல்லை, இல்லை. செத்துப் போயிருந்தால் கண் விழிகள் தெரியுமா? நான் புரட்டிப் பார்த்தவனுடைய கண்கள் நன்றாக மூடியிருந்தன. களைத்துப் போய்த் தூங்கிக் கொண்டிருந்தான் போலிருக்கிறது......"

"முட்டாளே! நீ என்ன செய்தாய்! அவனைச் சும்மா விட்டு விட்டு வந்தாயா? தலையிலே ஒரு கல்லைத் தூக்கிப் போட்டிருக்கக் கூடாதா?......"

"பழுவேட்டரையன் தலையைப் பற்றி உனக்குத் தெரியாது. அவன் தலையிலே கல்லைப் போட்டால், கல்லுத்தான் உடைந்து தூள் தூளாகும்!"

"அப்படியானால், கொள்ளிடத்து உடைப்பு வெள்ளத்திலாவது அவனை இழுத்து விட்டிருக்கலாமே?"

"நான்தான் சொன்னேனே? அவனைக் கண்டதும் எனக்கு யமனுடைய அண்ணனைக் கண்டது போல் ஆகிவிட்டது. கடம்பூரில் அவன் முன்னால் வேலனாட்

டம் ஆடியபோது கூட என் நெஞ்சு திக், திக் என்று அடித்துக் கொண்டு தானிருந்தது. என்னை அவன் அடையாளங் கண்டு கொண்டானானால்......"

"அதை நினைத்து இப்போது எதற்கு நடுங்குகிறாய்?"

"அவன் உயிரோடிருக்கும் வரையில் எனக்குக் கொஞ்சம் திகிலாய்த்தானிருக்கும். நீ சொன்னபடி செய்யாமற் போனோமே, அவனை வெள்ளத்தில் புரட்டித் தள்ளாமல் வந்து விட்டோமே என்று கவலையாயிருக்கிறது......"

"ஒரு கவலையும் வேண்டாம். ஒரு விதத்தில் பெரிய பழுவேட்டரையன் உயிரோடிருப்பதே நல்லது. அப்போது தான், சுந்தர சோழனும் அவனுடைய பிள்ளைகளும் இறந்து ஒழிந்த பிறகு சோழ நாட்டுச் சிற்றரசர்கள் இரு பிரிவாய்ப் பிரிந்து நின்று சண்டையிடுவார்கள். பழுவேட்டரையர்களும் சம்புவரையர்களும் ஒரு பக்கத்திலும் கொடும்பாளூர் வேளானும் திருக்கோவலூர் மலையமானும் இன்னொரு பக்கத்திலும் இருந்து சண்டையிடுவார்கள். அது நம்முடைய நோக்கத்துக்கு மிக்க அநுகூலமாயிருக்கும். அவர்கள் தங்களுக்குள் சண்டையிடும்போது நாம் பாண்டிய நாட்டில் இரகசியமாகப் படை திரட்டிச் சேர்க்கலாம்......"

"ரவிதாஸா! 'அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா' என்ற கதையாகப் பேசுகிறாய்! சுந்தர சோழனுக்கும் அவனுடைய இரு புதல்வர்களுக்கும் நாளைக்கு இறுதி நேர்ந்தால் அல்லவா நீ சொன்னபடி சோழநாட்டுத் தலைவர்கள் சண்டை போட்டுக் கொள்வார்கள்? மூன்று பேருக்கும் நாளைக்கே முடிவு வரும் என்பது என்ன நிச்சயம்? உனக்கு ஒரு செய்தி தெரியுமா?......"

"எதைச் சொல்லுகிறாய்?"

"நாகைப் பட்டினத்தில் அருள்மொழி வர்மன் உயிரோடிருக்கிறானாம்! மக்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு அவனே சோழ நாட்டின் சக்கரவர்த்தி ஆக வேண்டும் என்று ஆர்ப்பரிக்கிறார்களாம்! நீ கேள்விப்பட்டாயா?"

ரவிதாஸன் மறுபடியும் சிரித்துவிட்டு "நான் கேள்விப்படவில்லை. எனக்கே அது தெரியும். அருள்மொழி வர்மனைப் புத்தவிஹாரத்தி லிருந்து வெளிப்படுத்தியது யார் என்று நினைக்கிறாய்? நம் ரேவதாஸக் கிரம வித்தனுடைய மகள் ராக்கம்மாள் தான்! அவள் தான் படகோட்டி முருகய்யனுடைய மனைவி!" என்றான்.

"அதனால் என்ன? அருள்மொழி வர்மன் வெளிப் பட்டதனால் என்ன லாபம்? அவனை இனி எப்போதும் லட்சக்கணக்கான ஜனங்கள் அல்லவா சூழ்ந்து கொண்டிருப்பார்கள்? ஈழ நாட்டில் அவன் இரண்டு மூன்று பேருடன் இருந்த போதே நம்முடைய முயற்சி பலிக்கவில்லையே?" என்றான் தேவராளன்.

"அதுவும் நல்லதுதான் என்று சொன்னேனே? மூன்று பேருக்கும் ஒரே நாளில் யமன் வருவதற்கு இருக்கும்போது ..."

"ரவிதாஸா! லட்சம் பேருக்கு மத்தியில் உள்ள இளவரசனிடம் யமன் எப்படி நெருங்குவான்? அதை நீ சொல்லவில்லையே?"

"நெருங்குவான், அப்பனே, நெருங்குவான்! யானைப்பாகனுடைய அங்குசத்தின் நுனியில் யமன் உட்கார்ந்திருப்பான்! சரியான சமயத்தில் இளவரசனுடைய உயிரை வாங்குவான்! பரமேச்சுவரா! சோழநாட்டு மக்கள் இளவரசனை யானைமீது ஏற்றிவைத்து ஊர்வலம் விட்டுக் கொண்டு தஞ்சையை நோக்கி வருவார்கள். அந்த யானையை ஓட்டும் பாகனுக்கு வழியில் ஏதாவது ஆபத்து வந்துவிடும். அவனுடைய இடத்தில் நம் ரேவதாஸக் கிரமவித்தன் யானைப்பாகனாக அமருவான்! அப்புறம் என்ன நடக்கும் என்பதை நீயே ஒருவாறு ஊகித்துக் கொள்!"

"ரவிதாஸா! உன் புத்திக் கூர்மைக்கு இணை இல்லை என்பதை ஒத்துக் கொள்கிறேன். கிரமவித்தன் எடுத்த காரியத்தை முடிப்பான் என்று நாம் நம்பியிருக்கலாம். சுந்தரசோழன் விஷயம் என்ன? அவனுக்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்?" என்றான் தேவராளன்.

"பழுவேட்டரையனுடைய கருவூல நிலவறையில் சோமன் சாம்பவனை விட்டு விட்டு வந்திருக்கிறேன். கையில் வேலாயுதத்துடன் விட்டு வந்திருக்கிறேன். அங்கேயிருந்து சுந்தரசோழன் அரண்மனைக்குச் சுரங்கப்பாதை போகிறது. சுந்தரசோழன் படுத்திருக்கும் இடத்தையே சோமன் சாம்பவனுக்குச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். இரண்டு கண்ணும் தெரியாத குருடன் கூட நான் குறிப்பிட்ட இடத்தில் நின்று வேலை எறிந்து சுந்தரசோழனைக் கொன்றுவிடலாம். சோமன் சாம்பவனை 'அவசரப் படாதே! நாளை வரையில் பொறுத்துக்

கொண்டிரு!' என்று எச்சரித்து விட்டு வந்திருக்கிறேன்......''

''அது எதற்காக? சமயம் நேரும் போது காரியத்தை முடிப்பதல்லவா நல்லது?''

''முட்டாளே! சுந்தரசோழன் முன்னதாகக் கொலையுண்டால், அந்தச் செய்தி கேட்டதும் அவன் குமாரர்கள் ஜாக்கிரதையாகிவிட மாட்டார்களா? அந்த நோயாளிக் கிழவன் இறந்துதான் என்ன உபயோகம்? அது இருக்கட்டும்; நீ என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாய்? கடம்பூர் மாளிகையில் எல்லாரும் எப்படியிருக்கிறார்கள்? அங்கே நாளை இரவு நடக்கப் போகிற காரியம் அல்லவா எல்லாவற்றையும் விட முக்கியமானது?''

''கடம்பூரில் எல்லாம் கோலாகலமாகத்தான் இருந்து வருகிறது. கலியாணப் பேச்சும் காதல் நாடகங்களுமாயிருக்கின்றன. நீ என்னமோ அந்தப் பழுவூர் ராணியை நம்பியிருப்பது எனக்குப் பிடிக்கவே இல்லை......''



''பழுவூர் ராணியா அவள்? பாண்டிமாதேவி என்று சொல்! வீர பாண்டியர் இறப்பதற்கு இரண்டு நாளைக்கு முன்னால் அவளைத் தம் பட்ட மகிஷியாக்கிக் கொண்டதை மறந்து விட்டாயா? வீர பாண்டியர் மரணத்துக்குப் பழிக்குப் பழி வாங்க அவள் சபதம் செய்திருப்பதை மறந்து விட்டாயா? ஒரு வாரத்துக்கு முன்னால் இதே இடத்தில் அவள் பாண்டிய குமாரன் கையிலிருந்து பாண்டிய குலத்துவீரவாளைப் பெற்றுக் கொள்ளவில்லையா......?''

''ஆமாம், ஆமாம்! ஆனால் நேற்று மாலை உன் பாண்டிமா தேவி வீர நாராயண ஏரியில் உல்லாசப் படகு யாத்திரை செய்து விட்டுத் திரும்பி வந்ததை நீ பார்த்திருக்க வேண்டும்......''

''உல்லாசமாயிராமல் பின் எப்படியிருக்க வேண்டும் என்கிறாய்? மனத்தில் உள்ளதை மறைத்து வைக்கும் வித்தையை நந்தினியைப் போல் கற்றிருப்பவர் யாரும் கிடையாது. இல்லாவிட்டால், பழுவேட்டரையனின் அரண்மனையில் மூன்று வருஷம் காலந் தள்ள முடியுமா? அங்கே இருந்தபடி நம்முடைய காரியங்களுக்கு இவ்வளவு உதவிதான் செய்திருக்க முடியுமா? ஆமாம், பழுவேட்டரையனை நீ சற்றுமுன் கொள்ளிடக் கரைத் துர்க்கையம்மன் கோவிலில் பார்த்ததாகக் கூறினாயே! அவனை ஏற்றி வந்த படகு கவிழ்ந்ததைப் பற்றி நானும் கேள்விப் பட்டேன். பழுவேட்டரையன் எப்போது கடம்பூரிலிருந்து புறப்பட்டான்? ஏன்?......''

''ஏன் என்று எனக்கு உறுதியாகத் தெரியாது. மதுராந்தகத் தேவனைக்

கடம்பூருக்கு அழைத்து வரப் புறப்பட்டதாகச் சொன்னார்கள். நேற்றுக் காலை பழுவேட்டரையன் கிளம்பிச் சென்றான். அவன் சென்ற பிறகு இளவரசர்கள் வேட்டையாடச் சென்றார்கள். இளவரசிமார்கள் வீர நாராயண ஏரிக்கு ஜலக்கிரீடை செய்யச் சென்றார்கள். இளவரசர்களும் இளவரசிகளும் திரும்பி வந்த குதூகலமான காட்சியை நீ பார்த்திருந்தாயானால் இவ்வளவு நம்பிக்கையோடு பேச மாட்டாய்!..."

"அதைப் பற்றி நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். பழுவேட்டரையனைத் தஞ்சைக்கு அனுப்பி வைத்ததிலிருந்தே பாண்டிமா தேவியின் மனதை அறிந்து கொள்ளலாமே?..."

"பெண்களின் மனதை யாரால் அறிய முடியும்? அந்தக் கிழவனை ஊருக்கு அனுப்பியது பழி வாங்கும் நோக்கத்துக்காகவும் இருக்கலாம்; காதல் நாடகம் நடத்துவதற்காகவும் இருக்கலாம்..."

"என்ன உளறுகிறாய், பரமேச்சுரா! நந்தினி அந்தப் பழைய கதையை அடியோடு மறந்து விட்டாள். கரிகாலனை அவள் இப்போது விஷம் போலத் துவேஷிக்கிறாள்!"

"கரிகாலனைப் பற்றி நான் சொல்லவில்லை. அவனுடைய தூதன் வந்தியத்தேவனைப் பற்றிச் சொல்லுகிறேன். இரண்டு மூன்று தடவை நந்தினி அவனைத் தப்பிச் செல்லும்படி விட்டதை நீ மறந்து விட்டாயா?"

மந்திரவாதி கலகலவென்று சிரித்து விட்டு, "ஆமாம்; வந்தியத்தேவன் எதற்காகப் பிழைத்திருக்கிறான் என்பது சீக்கிரத்திலேயே தெரியும். அது தெரியும் போது நீ மட்டுந்தான் ஆச்சரியப்படுவாய் என்று எண்ணாதே! இன்னும் ரொம்பப் பேர் ஆச்சரியப்படுவார்கள்! முக்கியமாக, சுந்தர சோழரின் செல்வக் குமாரி குந்தவை ஆச்சரியப்படுவாள். அவள் எந்தக் குமார வாலிபனுக்குத் தன் உள்ளத்தைப் பறி கொடுத்திருக்கிறாளோ, அவனே அவளுடைய தமையன் ஆதித்த கரிகாலனைக் கொன்றவன் என்று அறிந்தால் ஆச்சரியப்பட மாட்டாளா?" என்றான்.

"என்ன சொல்கிறாய், ரவிதாஸா! உண்மையாகவே வந்தியத்தேவனா கரிகாலனைக் கொல்லப் போகிறான்? அவன் நம்மோடு சேர்ந்து விட்டானா, என்ன?"

"அதெல்லாம் இப்போது கேட்காதே! கரிகாலனைக் கொல்லும் கை யாருடைய கையாக இருந்தால் என்ன? பாண்டிய குலத்து மீன் சின்னம் பொறித்த வீரவாள் அவனைக் கொல்லப் போகிறது. அவனைக் கொன்ற பழி வந்தியத்தேவன் தலை மீது விழப் போகிறது! நம்முடைய ராணியின் சாமர்த்தியத்தைப் பற்றி இப்போது என்ன சொல்லுகிறாய்?"

"நீ சொன்னபடி எல்லாம் நடக்கட்டும். பிற்பாடு கேள், சொல்லுகிறேன்."

"வேறு எது நடந்தாலும் நடக்காவிட்டாலும், கரிகாலனுடைய ஆவி நாளை இரவுக்குள் பிரிவது நிச்சயம். நந்தினி அவள் ஏற்றுக் கொண்ட பொறுப்பை நிறைவேற்றியே தீருவாள். நம்முடைய பொறுப்பையும் நாம் நிறைவேற்ற வேண்டும்......"

"நம்முடைய பொறுப்பு என்ன?"

"நாளை இரவு கடம்பூர் மாளிகையிலிருந்து வெளியேறும் சுரங்கப் பாதையில் ஆயத்தமாகக் காத்திருக்க வேண்டும். காரியம் முடிந்ததும் நந்தினி அதன் வழியாக வருவாள். அவளை அழைத்துக் கொண்டு இரவுக்கிரவே கொல்லி மலையை அடைந்து விட வேண்டும். அங்கே இருந்து கொண்டு, சோழ நாட்டில் நடைபெறும் அல்லோல கல்லோலத்தைப் பார்த்துக் கொண்டிருப்போம். ஒருவேளை சௌகரியப் பட்டால்......"

"சௌகரியப்பட்டால், என்ன?"

"பழுவேட்டரையனின் கருவூல நிலவறையில் சேர்த்து வைத்திருக்கும் பொருள்களையெல்லாம் சுரங்கப் பாதை வழியாகக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். சோழ நாட்டுப் பொக்கிஷத்திலிருந்து கொண்டு போன பொருள்களைக் கொண்டே சோழ நாட்டின் மீது போர் தொடுக்கப் படை திரட்டுவது எவ்வளவு பொருத்தமாயிருக்கும்?"

இவ்விதம் கூறிவிட்டு மறுபடியும் ரவிதாஸன் சிரித்தான்.

தேவராளனை நடித்த பரமேச்சுவரன், "சரி, சரி! ஆகாசக் கோட்டையை ரொம்பப் பெரிதாகக் கட்டி விடாதே! முதலில் கொள்ளிடத்தைத் தாண்டி அக்கரையை அடைந்து கடம்பூர் போய்ச் சேரலாம். கடம்பூரில் நீ சொன்னபடி எல்லாம் நடக்கட்டும்! பிறகு, பழுவேட்டரையனுடைய பொக்கிஷத்தைக் கொள்ளையடிப்பது பற்றி யோசிக்கலாம். என்ன சொல்லுகிறாய்? இப்போதே கிளம்பலாமா? இரவே கொள்ளிடத்தைத் தாண்டி விடுவோமா?" என்றான்.

"வேண்டாம், வேண்டாம்! பொழுது விடிந்ததும் படகில் ஏறினால் போதும். அதற்குள் காற்றும் நன்றாக அடங்கி விடும். ஆற்று வெள்ளமும் கொஞ்சம் குறைந்து விடும்."

"அப்படியானால், இன்றிரவு இந்தப் பள்ளிப் படை மண்டபத்திலேயே படுத்திருக்கலாமா?"

ரவிதாஸன் சற்று யோசித்தான். அப்போது சற்றுத் தூரத்தில் நரிகள் ஊளையிடும் சத்தம் கேட்டது. ரவிதாஸனுடைய உடல் நடுங்கிற்று.

"ரவிதாஸா! கேவலம் நரிகளின் குரலைக் கேட்டு ஏன் இப்படி நடுங்குகிறாய்?" என்றான் தேவராளன்.

"அப்பனே! கோடிக்கரைப் புதை சேற்றில் கழுத்து வரையில் நீ புதைபட்டிருந்து, சுற்றிலும் நூறு நரிகள் நின்று உன்னைத் தின்பதற்காகக் காத்திருக்கும் பயங்கரத்தை நீ அநுபவித்திருந்தால், இப்படிச் சொல்லமாட்டாய்! சிங்கத்தின் கர்ஜனையையும் மத யானையின் ஓலத்தையும் கேட்டு, எனக்குப் பயம் உண்டாவதில்லை. நரியின் ஊளையைக் கேட்டால் குலை நடுங்குகிறது. வா! வா! இந்தச் சுடுகாட்டில் இராத் தங்க வேண்டாம். வேறு எங்கேயாவது கிராமத்துக்குப் பக்கமாயுள்ள கோவில் அல்லது சத்திரத்தில் தங்குவோம். இல்லாவிட்டால், கொள்ளிடக் கரையிலுள்ள துர்க்கை கோவிலைப் பற்றிச் சொன்னாயே? அங்கே போவோம். இன்னமும் அந்தக் கிழவன் அங்கே படுத்திருந்தால், வெள்ளத்தில் அவனை இழுத்து விட்டு விடலாம். அதுவே அவனுக்கு நாம் செய்யும் பேருதவியாயிருக்கும். நாளைக்கு மறுநாள் வரையில் அவன் உயிரோடிருந்தால், ரொம்பவும் மனத்துயரத்துக்கு ஆளாக நேரிடும்!"

மேற்கூறிய சம்பாஷணையை ஏறக்குறைய ஒன்றும் விடாமல் பெரிய பழுவேட்டரையர் கேட்டுக் கொண்டிருந்தார். அவர்கள் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் அவருடைய செவிகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோலிருந்தது. அவருடைய நெஞ்சு ஒரு பெரிய எரிமலையின் கர்ப்பத்தைப்போல் தீக்குழம்பாகிக் கொதித்தது. தாம் காதலித்துக் கலியாணம் செய்து கொண்ட பெண், வீரபாண்டியன் மரணத்துக்காகச் சோழ குலத்தின்மீது பழி வாங்க வந்தவள் என்பதும், மூன்று வருஷங்களாக அவள் தம்மை ஏமாற்றி வருகிறாள் என்பதும் சொல்ல முடியாத வேதனையையும் அவமானத்தையும் அவருக்கு உண்டாக்கின.

ஆறு தலைமுறையாகச் சோழர் குலத்துக்கும் பழுவூர் வம்சத்துக்கும் நிலைபெற்று வளர்ந்து வரும் உறவுகளை அச்சமயம் பழுவேட்டரையர் நினைத்துக் கொண்டார். பார்க்கப் போனால், சுந்தர சோழனும் அவனுடைய மக்களும் யார்? சுந்தரசோழனுடைய பாட்டி பழுவூர் வம்சத்தைச் சேர்ந்தவள் அல்லவா? சுந்தரசோழனுடைய மக்கள்மீது தமக்கு ஏற்பட்ட கோபமெல்லாம் சமீபகாலத்தது அல்லவா? ஆதித்த கரிகாலன் ஏதோ சிறு பிள்ளைத்தனமாக நடந்து கொண்டான் என்பதற்காகவும் மலையமானை நமக்குப் பிடிக்கவில்லை என்பதற்காகவும், எவ்வளவு பயங்கரமான சதிச் செயல்களுக்கு இடங் கொடுத்து விட்டோம்? சோழர் குலத்தின் தீராப் பகைவர்களான பாண்டிய நாட்டுச் சதிகாரர்கள் நம்முடைய அரண்மனையிலிருந்து கொண்டு, நம்முடைய நிலவறைப் பொக்கிஷத்திலிருந்து திருடிப் போன பொருளைக் கொண்டு, சோழ குலத்துக்கு விரோதமாகச் சதிகாரச் செயல்களைச் செய்ய அல்லவா இடம் கொடுத்து விட்டோம்? ஆகா! இந்தச் சண்டாளர்கள் சொன்னபடி நாளை இரவுக்குள் மூன்று இடங்களில் மூன்று பயங்கரமான கொலைகள் நடக்கப் போகின்றனவா? நம்முடைய உடலில் மூச்சு இருக்கும் வரையில் முயன்று அவற்றைத் தடுத்தேயாக வேண்டும். இன்னும் அறுபது நாழிகை நேரம் இருக்கிறது. அதற்குள் எவ்வளவோ காரியங்கள் செய்துவிடலாம். இரவுக்கிரவே குடந்தை சென்று தஞ்சைக்கும் நாகைப் பட்டினத்துக்கும் செய்தி அனுப்பிவிட்டுக் கடம்பூருக்குக் கிளம்ப வேண்டும். இந்தப் பாதகர்கள் அங்கே போய்ச் சேர்வதற்குள் நாம் போய்விட வேண்டும்...

இவர்களைக் கடம்பூருக்கு வரும்படி விடுவதா? இந்த இடத்திலேயே இவர்களைக் கொன்று போட்டு விட்டுப் போய் விடுவது நல்லதல்லவா? நம்மிடம் ஆயுதம் ஒன்றுமில்லை. இல்லாவிட்டால் என்ன? வஜ்ராயுதத்தை நிகர்த்த நம் கைகள் இருக்கும்போது வேறு ஆயுதம் எதற்கு? ஆனால் இவர்கள் ஒருவேளை சிறிய கத்திகள் இடையில் செருகி வைத்திருக்கக்கூடும். அவற்றை எடுப்பதற்கே இடங்கொடுக்காமல் இரண்டுபேருடைய கழுத்தையும் இறுக்கிப் பிடித்து நெறித்துக் கொன்றுவிட வேண்டும்......

ஆனால் அவ்வாறு இவர்களுடன் இந்த இடத்தில் சண்டை பிடிப்பது உசிதமா?

இவர்களிடம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைத் தெரிந்து

கொண்டாகிவிட்டது. நாம் வழிபடும் குல தெய்வமாகிய துர்க்கா பரமேசுவரியே படகு கவிழச் செய்து, நம்மை அவளுடைய திருக் கோவிலில் படுத்திருக்கச் செய்து, இந்தப்பயங்கர இரகசியங்களைத் தெரிந்து கொள்ளும்படியும் செய்திருக்கிறாள். சக்கரவர்த்திக்கும் அவருடைய குமாரர்களுக்கும் விபத்து நேரிடாமல் பாதுகாப்பதல்லவா நம்முடைய முக்கியமான கடமை? அதிலும், கடம்பூரில் கரிகாலனுக்கு எதுவும் நேராமல் தடுப்பது மிக மிக முக்கியமானது. அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால் நமக்கும் நமது குலத்துக்கும் அழியாத பழிச்சொல் ஏற்பட்டு விடும். ஆறு தலைமுறையாகச் சோழ குலத்துக்குப் பழுவூர் வம்சத்தினர் செய்திருக்கும் உதவிகள் எல்லாம் மறைந்து மண்ணாகி விடும். பெண் என்று எண்ணி நமது அரண்மனையில் கொண்டு வந்து வைத்திருந்த அரக்கியினால் கரிகாலன் கொல்லப்பட்டால், அதைக் காட்டிலும் நமக்கு நேரக்கூடிய அவகேடு வேறு ஒன்றுமேயில்லை.

ஆகா! அத்தகைய அழகிய வடிவத்துக்குள்ளே அவ்வளவு பயங்கரமான ஆலகால விஷம் நிறைந்திருக்க முடியுமா? மூன்று உலகத்தையும் மயக்கக் கூடிய மோகனப் புன்னகைக்குப் பின்னால் இவ்வளவு வஞ்சகம் மறைந்திருக்க முடியுமா? இந்தச் சண்டாளர்கள் சற்று முன்னால் சொன்னதெல்லாம் உண்மையாக இருக்க முடியுமா?......

**ப**ழுவேட்டரையருடைய உள்ளத்தில் கோபத் தீ கொழுந்து விட்டு எரியும்படி செய்த அந்தச் சதிகாரர்களின் வார்த்தைகள் ஒரு விதத்தில் அவருக்குச் சிறிது திருப்தியையும் அளித்திருந்தன. நந்தினி சதிகாரியாக இருக்கலாம்; தம்மிடம் அன்பு கொண்டதாக நடித்து வஞ்சித்து ஏமாற்றி வந்திருக்கலாம். ஆனால் அவள் கரிகாலன் மீதோ கந்தமாறன் அல்லது வந்தியத்தேவன் மீதோ மோகம்கொண்ட காரணத்தினால் தம்மை வஞ்சிக்கவில்லை! அந்த மௌடீகச் சிறுவர்களை அவள் பொருட்படுத்தவில்லை. அவளுடைய அந்தரங்க நோக்கத்துக்கு அவர்களையும் உபயோகப் படுத்துவதற்காகவே அவர்களிடம் சுமுகமாகப் பேசிப் பழகிவருகிறாள்!

இந்தச் செய்தி பழுவேட்டரையரின் அந்தரங்கத்தின் அந்தரங்கத்துக்குள்ளே அவரையும் அறியாமல் சிறிது திருப்தியை அளித்தது. கரிகாலன் கொல்லப்படாமல் தடுக்க வேண்டியது, தம் குல கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ளவும் தமக்கு என்றென்றைக்கும் அழியாத அபகீர்த்தி நேராமல் தடுத்துக் கொள்ளவும் மட்டும் அல்ல; நந்தினியை அத்தகைய கோரமான பாவ காரியத்திலிருந்து தப்புவிப்பதற்காகவுந்தான். ஒருவேளை அவளுடைய மனத்தையே மாற்றிவிடுதல் கூடச் சாத்தியமாகலாம். இந்தச் சண்டாளச் சதிகாரர்களிடம் அகப்பட்டுக் கொண்டிருப்பதால் அவள் வேறு வழியின்றி இவர்களுக்கு உடந்தையாயிருக்கலாம் அல்லவா? இவர்களை இங்கேயே கொன்று ஒழித்து விட்டால் நந்தினிக்கு விடுதலை கிடைக்கலாம் அல்லவா?...

இவ்வாறு எண்ணி அந்த வீரக் கிழவர் தம்மையறியாமல் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். சிம்ம கர்ஜனை போன்ற அந்தச் சத்தம் சதிகாரர்கள் இருவரையும் திடுக்கிடச் செய்தது.

“யார் அங்கே?” என்றான் தேவராளனாகிய பரமேச்சுவரன்.

அதற்குமேல் தாம் மறைந்திருப்பது சாத்தியம் இல்லை, உசிதமும் ஆகாது என்று கருதிப் பெரிய பழுவேட்டரையர் வெளிப்பட்டு வந்தார்.

**ம**ழைக்கால இருட்டில் திடீரென்று தோன்றிய அந்த நெடிய பெரிய உருவத்தைக் கண்டு சதிகாரர்கள் இருவரும் திகைத்து நின்றபோது, “நான்தான் யமனுக்கு அண்ணன்!” என்று கூறிவிட்டுப் பழுவேட்டரையர் சிரித்தார்.

அந்தக் கம்பீரமான சிரிப்பின் ஒலி அவ் வனப் பிரதேசம் முழுவதையும் நடு நடுங்கச் செய்தது.

வந்தவர் பழுவேட்டரையர் என்று அறிந்ததும் ரவிதாஸன், தேவராளன் இருவரும் தப்பி ஓடப் பார்த்தார்கள்! ஆனால் பழுவேட்டரையர் அதற்கு இடங் கொடுக்கவில்லை. தம் நீண்ட கரங்கள் இரண்டையும் நீட்டி இருவரையும் பிடித்து நிறுத்தினார். அவருடைய வலது கை ரவிதாஸனுடைய கழுத்தைப் பற்றியது. இடது கை தேவராளனுடைய ஒரு புஜத்தைப் பற்றியது. வஜ்ராயுதத்தைக் காட்டிலும் வலிமை பொருந்திய அந்தக் கரங்களின் பிடிகள் அவ்விருவரையும் திக்குமுக்காடச் செய்தன.

எவ்வளவுதான் கையில் வலிவு இருந்தாலும் இருவரையும் ஏக காலத்தில் சமாளிக்க முடியாது என்று எண்ணிப் பழுவேட்டரையர் தேவராளனைத் தலைகுப்புற விழும்படி கீழே தள்ளினார். கீழே விழுந்தவன் முதுகில் ஒரு காலை ஊன்றி வைத்துக் கொண்டு ரவிதாஸனுடைய கழுத்தை இரண்டு கைகளாலும் நெறிக்கத் தொடங்கினார்.

ஆனால் தேவராளன் சும்மா இருக்கவில்லை. அவனுடைய இடுப்பில் செருகி

யிருந்த கத்தியைச் சிரமப்பட்டு எடுத்துத் தன்னை மிதித்துக் கொண்டிருந்த காலில் குத்தப் பார்த்தான். பழுவேட்டரையர் அதை அறிந்து கொண்டார். இன்னொரு காலினால் அவனுடைய கை மணிக்கட்டை நோக்கி ஒரு பலமான உதை கொடுத்தார். கத்தி வெகு தூரத்தில் போய் விழுந்தது. தேவராளனுடைய ஒரு கையும் அற்று விழுந்து விட்டது போல் ஜீவனற்றதாயிற்று. ஆனால் அதே சமயத்தில் அவனை மிதித்திருந்த கால் சிறிது நழுவியது. தேவராளன் சட்டென்று நெளிந்து கொடுத்து வெளியே வந்து குதித்து எழுந்தான். உதைபடாத கையின் முஷ்டியினால் பழுவேட்டரையரை நோக்கிக் குத்தத் தொடங்கினான். அந்தக் குத்துக்கள் கருங்கல் பாறைச் சுவர் மீது விழுவன போலாயின. குத்திய தேவராளனுடைய கைதான் வலித்தது. அதுவும் இன்னொரு கையைப் போல் ஆகிவிடுமோ என்று தோன்றியது.

இதற்கிடையில் ரவிதாஸன் தன் கழுத்திலிருந்து பழுவேட்டரையருடைய கரங்களை விலக்கப் பெருமுயற்சி செய்தான். ஒன்றும் பலிக்கவில்லை. கிழவருடைய இரும்புப் பிடி சிறிதும் தளரவில்லை. ரவிதாஸனுடைய விழிகள் பிதுங்கத் தொடங்கின. உளறிக் குளறிக் கொண்டே "தேவராளா! சீக்கிரம்! சீக்கிரம்! கோவில் மேலே ஏறு! மண்டபத்தைக் கீழே தள்ளு!" என்றான்.

தேவராளன் உடனே பாய்ந்து சென்று பள்ளிப்படைக் கோயிலின் மேல் மண்டபத்தின் மீது ஏறினான். அங்கே மண்டபத்தின் ஒரு பகுதியில் பிளவு ஏற்பட்டு இனிச் சிறிது நகர்ந்தாலும் கீழே விழக்கூடிய நிலையில் இருந்தது. அதை முன்னமே அவர்கள் கவனித்திருந்தார்கள். ரவிதாஸன் அதைத்தான் குறிப்பிடுகிறான் என்று தேவராளன் தெரிந்து கொண்டான். மண்டபத்தின் இடிந்த பகுதியைத் தன் மிச்சமிருந்த வலிவை யெல்லாம் பிரயோகித்து நகர்த்தித் தள்ளினான். அது விழும்போது அதனுடனிருந்த மரம் ஒன்றையும் சேர்த்துத் தள்ளிக் கொண்டு விழுந்தது.

பழுவேட்டரையர், மேலேயிருந்து மண்டபம் நகர்ந்து விழப்போவதைத் தெரிந்து கொண்டார். ஒரு கையை ரவிதாஸனுடைய கழுத்திலிருந்து எடுத்து மேலேயிருந்து விழும் மண்டபத்தைத் தாங்கிக் கொள்ள முயன்றார்.

ரவிதாஸன் அப்போது ஒரு பெருமுயற்சி செய்து அவருடைய பிடியிலிருந்து தப்பி அப்பால் நகர்ந்தான்.

மரமும் மண்டபமும் பழுவேட்டரையர் பேரில் விழுந்தன. பழுவேட்டரையர் தரையில் விழுந்து நினைவு இழந்தார்.

---

## சிநேகக் கோரிக்கை !




ரஷ்யாவின் புதிய பிரதமர் மாலங்கோவ் அமெரிக்காவோடு சமாதானம் செய்து கொள்ளப் பெருமுயற்சி செய்து வருகிறார். ஆனால் அமெரிக்காவோ அதைச் சந்தேகக் கண்ணுடன் பார்த்து வருகிறது.



# குமாஸ்தா

நடுத்தர வகுப்பு என்று கூறப்படும் தர்மசங்கட வகுப்பைச் சேர்ந்தவன் ஏழைக் குமாஸ்தா ரங்கநாதன். கல்லூரிப் படிப்பைக் குடும்பக் கஷ்டம் காரணமாகப் பாதியில் நிறுத்திவிட்ட தம்பி கோபு, பருவமடைந்த பாவையான தங்கை சுசிலா, பதிக்கேற்ற பத்தினி சீதா, ஒரு பையன், ஒரு பெண், வயது முதிர்ந்த தந்தை—இவர்கள் அவன் குடும்ப அங்கத்தினர்கள்.

புகையும் அடுப்பு, அந்த அடுப்புடன் போராடும் கண்ணீர் விடும் கண்கள், மளிகைக் கடைக்காரன்—வீட்டுக்காரன்—பால்காரி இவர்களின் இடையறாத நச்சரிப்பு, கண் பூத்துப் போகும் காரியாலய வேலை ஆகியவை குமாஸ்தா ரங்கநாதனின் குடும்ப தினசரி அலுவல்கள்.

சங்கடங்களும், கூச்சலும், மன வேதனையும் நிறைந்த இந்தக் கதையில் ஒரு சிறு காதல் கட்டமும் வருகிறது.

ரங்கநாதனின் தங்கை சுசிலா, ஜலம் பிடிக்கக் குழாயடிக்குச் செல்லுகிறாள். அப்பொழுது ரவி, காமிராவும் கையுமாக மோட்டாரில் வந்தான். கார் தண்ணீர் கேட்கவே, அவன் காரை நிறுத்தி விட்டு அவளிடம் தண்ணீர் யாசித்தான். அந்தக் கண நேரத்தில் காதல் பிறந்தது. அது எல்லாச் சினிமாக் கதாநாயகர்களையும் படுத்தி வைக்கிற மாதிரி ரவியையும் படுத்தி வைத்தது.

பள்ளிக்கூட நாடகத்துக்குப் போயிருந்த சுசிலாவைக் கண்டு பிடித்து அவளைத் தன் காரில் ஏற்றிக் கொண்டு போய் அவள் வீட்டில் விடும் அளவுக்கு அவனுக்குத் துணிச்சலைத் தந்தது. பிறகு சுசிலாவுக்கும் ரவிக்கும் விவாகம் நடந்தது.

முகூர்த்தம் நடந்த அன்றே சுசிலாவின் இன்பவாழ்க்கை இருண்டது. அதாவது புது மாப்பிள்ளை ரவி, ஏற்கெனவே கொடிய இருதய நோயினால் தவித்துக் கொண்டிருந்தான்; அன்று, மணவினை முடிந்த அன்று, அந்நோய் அவன் உயிரைக் கொள்ளை கொண்டது. மாப்பிள்ளையின் நோய் சமாசாரத்தை ஏற்கெனவே அறிந்து அன்று ரங்கநாதனுக்கு ரகசியமாக முகூர்த்தத்துக்கு முன்பே அறிவிக்கிறான் கோபு. ஆனால் ரங்கநாதன் ஊர் வாய்க்குப் பயந்து முகூர்த்தத்தை நிறுத்தவில்லை.

சுசிலாவாக நடிக்கும் பண்டரிபாய் கள்ளங் கபடற்ற கன்னிப் பெண்ணாக நடிக்கும்போதும், ரவியின் காதலைப் பெறும் போதும், கல்யாண தினத்தில் எவ்வளவு தடுத்துக் கூறியும் கேளாத ரவியின் வற்புறுத்தலுக்கு இணங்கிய போதும், அப்புறம் அவன் உயிர் துறந்தபோதும் சமயத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு மிகவும் நன்றாக நடிக்கிறார்.

ஒரு குமாஸ்தாவின் வாழ்க்கையில் இவ்வளவு கஷ்டங்கள் வந்தது போதுமென்று படப் பிடிப்பாளர் திருப்தி யடையவில்லை. இன்னும் பல கஷ்டங்கள் 'க்யூ' வரிசையில் நின்று தொடருகின்றன.

குமாஸ்தாவாக நடிப்பவர் ஸ்ரீ நாகையா என்பதைப் பார்த்ததுமே, 'இவர் இந்த இக்கட்டான நிலைமையிலிருந்து தப்ப முடியாது' என்று தீர்மானித்து விட்டேன். ஒரு பாத்திரத்தை ஸ்ரீ நாகையா ஏற்று நடிக்கிறார் என்றால், அந்தப் பாத்திரத்துக்கு, சீலத்துக்கும் நேர்மைக்கும் பஞ்சம் இராது; தயாள குணத்துக்கும் தன்மான உணர்ச்சிக்கும் பஞ்சம் இராது; சோகத்துக்கும் சோர்வுக்கும் பஞ்சம் இராது; அவர் அநுபவிக்கும் கஷ்ட நஷ்டங்களுக்கும் பஞ்சம் இராது.

வேலையை இழந்தபோது எல்லை கடந்த விரக்தி உணர்ச்சியை அவர் முகத்தில் பார்த்தவர்களுக்கு, சுசிலாவின் வாழ்க்கை மணமான தினமே பாழாகி விட்டது என்பதை அறிந்ததும் அவர் முகத்தில் ஏற்பட்ட எல்லை கடந்த சோகம் கண்ணீரை வருவிக்கும்.

ஏழைக் குமாஸ்தாவின் தங்கையாகப் பிறந்த சுசிலா கணவனை இழந்த பிறகு, மாமியார் வீட்டில் வாழ்கிறாள். நல்ல பணக்காரப் புக்ககத்தில் சுசிலா நிம்மதியாக வாழ ஆரம்பித்து விட்டால், அப்புறம் படத்தில் சோக ரஸத்துக்கு என்ன செய்வது?





மூன்று மணி நேரத்துக்கு மேல், ஓடுவதற்குச் சம்பவங்களுக்குத்தான் எங்கே போவது?

பேதை சுசீலாவுக்கு இயற்கை நியதியின் படி தாய்மையின் அறிகுறி தோன்றுகிறது. அதன் காரணமாக மாமியார் நெஞ்சிரக்கம் அற்றவளாக மாறி, அந்த உத்தமிக்கு மாசு கற்பித்து மனம் புண்படப் பேசி அவள் பிறந்தகத்துக்கு அனுப்பி விடுகிறாள்.

குமாஸ்தா ரங்கநாதன், சுசீலாவை ஏற்றுக் கொள்ளவில்லை. மனம் குமுறி, உடல் நடுங்கி, வார்த்தை குழறி, கண்கலுழ்ந்து, அப்பப்பா! ஸ்ரீ நாகையா படும் வேதனையைப் படம் பார்ப்பவர்கள் என்றும் மறக்க மாட்டார்கள்.

“சை, இந்த வசையுடன் உடலைத் தாங்குவதைவிட உயிரை விட்டுவிடலாமே!” என்று ஆத்திரத்துடன் கூறுகிறான் ரங்கநாதன்.

சுசீலா கதறுகிறாள்; கண்ணீர் விடுகிறாள். “அண்ணா, நீ கூட என் நடத்தையில் மாசு கற்பிக்கிறாயா?” என்று விக்கல்களுக்கும் விம்மல்களுக்கும் இடையே கேட்கிறாள். கடைசியில் ரங்கநாதனின் தம்பி கோபு வீரத்தோடு கிளம்பி, சுசீலாவை அழைத்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறுகிறான்.

சுசீலாவுக்குப் பெண் குழந்தை பிறக்கிறது. பிறகு அவர்களது வறுமையும் விடை பெற்றுக் கொள்கிறது. கோபு சொந்தமாக வியாபாரம் ஆரம்பித்துப் பணக்காரன் ஆகிறான்.

அதே சமயத்தில் ரங்கநாதன், உத்தியோகம் இழந்து, வீடிழந்து, மானம் இழந்து சத்திரத்தில் குடிபுகுந்து, கடைசியில் கஷ்டம் தாளாமல் தன் அருமைக் குழந்தையைக் கிணற்றில் தள்ளிச் சிறை புகுந்து விடுகிறான்.

சோக ரஸத்தில் திளைத்து வேதனைப் பட்டுக் கொண்டிருக்கும் படம் பார்ப்பவர்களுக்கு, மீண்டும் ஒரு ரஸமான காதல் கட்டம் வருகிறது. இந்தக் காதல் நாடகத்தின் கதாநாயகி, சுசீலாவின் பெண் ராணிதான். காதல் கொஞ்சம் புதுமாதிரியாகக் காரில் பிறந்து, பூத்துக் குலுங்கி, பஸ்ஸில் ஏறி, இறங்கி, வளர்ந்து ராணியின் வீட்டுக்கே வந்து எல்லோருக்கும் அறிமுகமாகிறது!

தான் போன பாதையிலேயே, இன்னும் கொஞ்சம் நவீன மோஸ்தரில் போகும் தன் பெண்ணைப் பார்த்துச் சுசீலா பெரிதும் திகில் அடைகிறாள். “முள்ளில் வாழையிலை பட்டாலும், வாழையிலையில் முள் பட்டாலும் கஷ்டம் வாழையிலைக்குத் தானம்மா! பெண் ஜன்மம் அப்படிப்பட்டது. நீ ஜாக்கிரதையாக நடந்து கொள்ளணும்” என்று உதாரண பூர்வமாக உணர்ச்சியுடன் பெண்ணின் நிலையை விளக்கி, சுசீலாவாக நடிக்கும் பண்டரிபாய் நல்ல பெயரைத் தட்டிக் கொண்டு போகிறார். அவர் நடை, உடை, பாவனை, கச்சிதமான முகவெட்டு எல்லாம் பொருத்தமா யிருக்கின்றன.

ரங்கநாதன் விடுதலை அடைகிறான். சுசீலாவின் பெண் ராணிக்கு விவாகம் நிச்சயமாகிறது. ரங்கநாதன் வேண்டா வெறுப்புடன் கல்யாணத்துக்கு வருகிறான். முகூர்த்தம் நடந்து கொண்டிருக்கும் போது, சுசீலாவின்மீது சுமத்தப் பட்டிருந்த பழைய மாசு மீண்டும் தலையெடுக்கிறது. சரியான சமயத்தில், சுசீலாவின் கணவனுடைய நாட் குறிப்பு (டைரி) தலையிட்டு நிலைமையைச் சீர்படுத்துகிறது; சுசீலா மாசற்றவள் என்று நிரூபிக்கிறது; ரங்கநாதன் முகத்தை மலரச் செய்கிறது; குமாஸ்தா படத்தையும் முடித்து வைக்கிறது. ‘வாழ்க நாட் குறிப்பு’ என்று நம்மை யெல்லாம் வாழ்த்த வைக்கிறது. அந்த நாட் குறிப்பு மட்டும் ‘ப்ரண்டு’ ராமசாமியிடம் சிக்கவில்லை யென்றால் அவ்வளவுதான்; படமே சிக்கலாகி யிருக்கும்.

அருணா பிலிம்ஸாரின் சோகம் ததும்பும் “குமாஸ்தா” படம் ‘ப்ரண்டு’ ராமசாமி, சுசீலாவின் மாமனாராக நடிக்கும் ஸ்ரீ சிவதாணு இவர்களின் உதவியினால் பல இடங்களில் நம்மைச் சிரிக்க வைக்கிறது!

பல ரஸங்களும் நிறைந்து கடைசி வரையில் பார்க்கக் கூடிய படம், “குமாஸ்தா.”

# ஒன்றும் இயலாதவரின் உயர்பெருஞ் சாதனை!

ரா. கி.

தமிழ் நாட்டில் நான் அறிந்தவர்களிலே 'ஒன்றும் இயலாத'வரான விந்தை மனிதர் ஒருவர் இருக்கிறார். அவர் பெயர் திரு மாசிலாமணி முதலியார். அவருடைய ஊர், செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ள வலாஜாபாத். அவர் பிறந்து வளர்ந்த ஊர் அதுவாயினும் நடைமுறையில் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் அமுதத் தமிழ் மொழியைக் கடைப் பிடிப்பவர். தமிழ் நாட்டிலும் தமிழர்கள் வாழுமிடங்களிலும் எங்கெங்கே சிறப்பான விழா எது நடந்த போதி லும் அங்கெல்லாம் அவரைக் காணலாம்.

திரு மாசிலாமணி முதலியார் பரம்பரையான பணக்காரர் அல்ல; முதல் மகா யுத்தத்தின் போதோ, இரண்டாவது மகா யுத்தத்தின் போதோ பெரும் பணம் சேர்த்தவரும் அல்ல; ஆகையால், பிரமிக்கத் தக்க நன்கொடைகள் அளிக்க இயலாதவர். பி.ஏ., எம்.ஏ., பி.ஓ.எல்., எம். ஓ. எல். முதலிய பட்டங்கள் பெற்றவர் அல்ல; போதனா முறையில் பயிற்சி பெற்ற வரும் அல்ல; ஆகையால், பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க இயலாதவர். தேகப் பயிற்சியோ, யோகாசன முறைகளோ பயின்றவர் அல்ல; எனவே, மற்றவர்களுக்கு அம்முறைகளைக் கற்பிக்க இயலாதவர். பாலாற்றங் கரையிலோ காவேரிக் கரையிலோ ஏராளமான நன்செய் புன்செய் நிலங்கள் படைத்த பெருநிலக் கிழார் (அதாவது மிராசுதார்) அல்ல; ஆதலின் தினந் தினம் நூற்றுக்கணக்கானவர்களுக்கு உணவளிக்க இயலாதவர். மேடையில் ஏறி மோனைக்கு மேல் மோனையும் எதுகையைத் தொடர்ந்து எதுகையும் போட்டுக் கேட்போரைத் திணற வைக்கும்படி சொற்பொழிவு ஆற்றுவதற்கு இயலாதவர். தேர்தல்களில் ஈடுபட்டு வோட்டு வாங்கிக் கொடுத்து அரசியல் உலகில் செல்வாக்குப் பெற இயலாதவர். திரு முதலியார் என்ஜினியர் அல்ல; கொல்லத்து வேலை தெரிந்தவர் அல்ல; கச்சுத்



மனிதர், எவ்விதம் இத்தகைய ஒரு கல்வி ஸ்தாபனத்தை ஆரம்பித்து, வளர்த்து, இவ்வளவு மேன்மையான முறையில் அதை நடத்தி வருகிறார் என்று அதிசயிப்பார்கள்.

''யானை, யாது மிலாக்கு இயையாதவே!''

என்னும் கம்பர் வாக்கை நினைவு கூர்ந்து, அதன் உண்மையை நன்கு உணர்வார்கள்.

பணம், பதவி, பட்டம், படிப்பு, செல்வாக்கு முதலிய பல 'இயல்பு'கள் திரு முதலியாரிடம் இல்லையென்றாலும், ஒரே ஒரு தலைசிறந்த இயல்பு அவரிடம் இருக்கிறது. எடுத்த காரியத்தில் பலருடைய ஒத்துழைப்பைப் பெறும் இயல்பை அவர் பெற்றிருக்கிறார். பணம் படைத்தவர்களிடமிருந்து பணம் பெறுவதற்கும், ஆற்றல் படைத்தவர்களிடமிருந்து ஆற்றல் பெறுவதற்கும், எல்லாருடைய நட்பையும் கூட்டுறவையும் பெறுவதற்கும் அவர் அறிந்திருக்கிறார். இந்த ஒரு இயல்பின் காரணமாக, அவரால் இயலாத காரியம் எதுவுமே இல்லையோ என்று கருதத் தோன்றுகிறது.

சென்ற வாரத்தில் ஒரு நாள் தஞ்சைக் கலைக் காட்சியைப் பார்த்து விட்டுத் தஞ்சாவூர் ரயில் சந்திப்பில் ரயில் ஏற வந்தபோது ஸ்ரீ மாசிலாமணி முதலியார் கையிலே வழக்கமாக வைத்திருக்கும் பையுடன் நிற்கக் கண்டேன். என்னை ரயிலேற்றி அனுப்புவதற்காக வந்த சிநேகிதர் அவரைப் பார்த்ததும் சற்று நின்று முகமன் கூறினார்.

"உங்கள் பாடசாலையைப் பற்றி அடிக்கடி பத்திரிகையில் பார்த்து வருகிறோம். உங்களைப் போல் இதுவரையில் சாதித்தவர்களும் இல்லை; இனிமேல் அத்தகைய சாதனை யாரும் செய்யப் போவதும் இல்லை" என்று சொன்னார்.

திரு மாசிலாமணி முதலியாரின் முகத்தைப் பார்த்தேன். அவர் சண்டைக்கு ஆயத்தமானதாகக் காணப்பட்டது. நல்ல வேளையாக அச் சமயம் ரயில் வந்து விட்டபடியால் என் நண்பர்

என்று சண்டை பிடிக்கிறவர் மாதிரி பேசுவார். பிறகு, "தயவு செய்து தாங்கள் ஒரு தடவை வாலாஜாபாத் வந்து பாருங்கள். எவ்வளவு பேருடைய உதவியினால் பாடசாலை நடக்கிறது என்பதை நன்கு தெரிந்து கொள்ளலாம். எல்லா விவரங்களையும் அங்கங்கே கல்லிலே எழுதி வைத்திருக்கிறோம். பிற்காலத்திலே கூடத் தவறாக யாரும் எண்ணக் கூடாது என்பதற்காக உதவி செய்தவர்களைப் பற்றிய எல்லா விவரங்களையும் கல்லிலே செதுக்கி வைத்திருக்கிறோம்! அதையெல்லாம் வந்து பாராமல் இங்கிருந்தபடி ஏதோ நான் சாதித்து விட்டதாகத் தாங்கள் சொல்லுவது கொஞ்சமும் சரியல்லவே!" என்று திரு முதலியார் சொல்லுவார். அந்த மனிதர் வாலாஜாபாத் பள்ளிக்கூடத்தை நேரில் வந்து பார்ப்பதற்கு ஏற்பாடும் செய்து விட்டுத்தான் போவார். வருகிறவர்களிடம், "அந்த உதவியைச் செய்யுங்கள்!" "இவ்வளவு நன்கொடை தாருங்கள்!" என்றெல்லாம் ஒன்றும் கேட்கவே மாட்டார். வருகிறவர்கள் தாங்களாகவே பள்ளிக்கூடம் நடக்கும் முறையைப் பார்த்து விட்டு இவ்வளவு அருமையான ஸ்தாபனத்துக்கு ஏதேனும் உதவி செய்யத் தீர்மானித்துக் கொண்டுதான் திரும்புவார்கள்.



வள்ளலார் இல்லத்து மாணவர்களின் தினசரிப் பிரார்த்தனை

* * *

இரண்டு வாரங்களுக்கு முன்பு வாலாஜாபாத் இந்து மத பாடசாலைக்குச் செல்லும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. வள்ளலார் மாணவர் இல்லத்தின் (ஹாஸ்டல்) புதுக் கட்டிடம் ஒன்றைத் திறந்து வைக்க வேண்டுமென்று திரு முதலியார் அழைத்திருந்தார். அந்தப் பாடசாலைக்குச் சென்றது இது மூன்றாவது தடவை. முன்னிரு தடவைகளிலும் பார்த்ததற்கும் இப்போது பார்த்ததற்கும் சம்பந்த மில்லாம லிருந்தது. பாலாற்றின் மணற் பரப்பு பக்கத்தில் தெரிந்திராவிட்டால் வேறு எங்கேயோ வழி தவறி வந்து விட்டோம் என்று எண்ண வேண்டி யிருந்திருக்கும். அவ்வளவு அழகான, கம்பீரத் தோற்றமுடைய கட்டிடங்கள் பள்ளிக்கூடத்துக்கும் மாணவர் இல்லத்துக்கும் எழும்பியிருந்தன. கட்டிடங்களுக்கு உள்ளே சென்று பார்த்தால், வியப்பு இன்னும் அதிகமாயிற்று. நடுவிலே விசாலமான பெரிய முற்றம்விட்டு நாலுபுறத்திலும் கூடங்கள் அமைக்கப்பட்டிருந்தன. அந்தக் கூடங்களே இல்லத்தில் மாணவர்கள் தங்குமிடங்களாகவும், பாடசாலையில் படிக்கும் இடங்களாகவும் பயன்பட்டன. அநாவசியமாக வாசற்படிகளும் கதவுகளும் இல்லை. உட்புறத்தில் கைப்பிடிச் சுவர்களும் தூண்களுமே கட்டிடத்தின் மேற் கூரையைத் தாங்கி நின்றன. இவ்விதம் சிக்கனமாகவும் உபயோகமாகவும் கட்டியிருந்தபடியால், அன்று திறந்து வைத்த ரூபாய் 42,000 கட்டிடம் உண்மையில் ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் செலவழித்துக் கட்டப்பட்டதாயிருக்க வேண்டும் என்று எண்ணச் செய்தது.

"இத்தகைய சிக்கனச் செலவுக் கட்டிடந்தான் என்னத்திற்கு! பள்ளிக்கூடங்களுக்குக் கூரை வேய்ந்த கொட்டகைகள் போதாவா!" என்று நான் முன்னெல்லாம் நினைத்ததுண்டு. விழுப்புரத்தில் நல்லமுறையில் நடத்தப்பட்டுவரும் மகாத்மா காந்தி பாடசாலைக்கு நேர்ந்த கதியை அறிந்த பிறகு அந்தக் கருத்தை மாற்றிக் கொண்டேன். சென்ற தீபாவளிப் பண்டிகை யன்று, தமிழகமெங்கும் கொண்டாட்டத்தில் ஈடுபட்டிருந்த சமயம், மேற்படி மகாத்மா காந்தி பாடசாலையில் யாரோ அறியாப் பிள்ளைகள் சுட்டு எறிந்த பட்டாசு வெடி விழுந்து, பள்ளிக்கூடத்தின் கூரைக் கட்டிடங்கள் எல்லாம் எரிந்து சாம்பராகிவிட்டன. அந்தப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த சுமார் அறுநூறு பிள்ளைகளுக்கும் இப்போது மரத்தடிகளிலும் இரவல் திண்ணைகளிலும் வகுப்புகள் நடந்து வருகின்றன என்று அறிகிறேன். இதை எண்ணும்போது, பள்ளிக்கூடங்களுக்குக் குறைந்த செலவில் 'அஸ்பெஸ்டாஸ்' கூரையுடன் கட்டப்படும் கட்டிடங்கள் கட்டிவிடுவதே நலம் என்று தோன்றுகிறது. (ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் நான் சொல்வதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். கல்வி என்ற பெயரால் பிள்ளைகளைக் கஷ்டப்படுத்தும் எல்லாப் பள்ளிக் கூடங்களுமே விழுப்புரம் பாடசாலையின் கதியை அடைய வேண்டுமென்று அவர்கள் கருதக்கூடும்! ஆனால், பள்ளிக்கூடக் கட்டிடங்கள் எரிந்தாலும் பிள்ளைகளின் கஷ்டம் என்னமோ தீருவதாக இல்லை. ஆகவே, சிக்கன

முறையில் நிரந்தரமான கட்டிடங்கள் நிர்மாணிப்பதே ஒருவிதத்தில் நல்லதல்லவா!)

* * *

ஆடம்பரமான கட்டிட வரிசைகளைத் தவிர வாலாஜாபாத் இந்து மத பாடசாலையில் என் கவனத்தைக் கவர்ந்த முக்கிய விஷயம் அங்கேயுள்ள பிள்ளைகள் திடகாத்திரர்களாயிருப்பது தான். நாடெங்கும் பஞ்சம், பஞ்சம் என்ற கூக்குரல். செங்கற்பட்டு ஜில்லாவோ நல்ல தீவிர பஞ்சப் பிரதேசம். பாலாற்றில் தண்ணீர் வந்து எத்தனையோ காலம் ஆயிற்று. இந்த நிலைமையில் சுமார் எண்ணூறு பிள்ளைகளை இவ்வளவு தேக ஆரோக்கியத்துடனும் திட வலிமையுடனும் கண்டது எனக்குப் பெரு வியப்பை அளித்தது. இந்த நல்ல நிலைமைக்கு இரண்டு விதக் காரணங்கள் உண்டு என்பதையும் அறிந்தேன். பள்ளிக்கூடத்தில் படிக்கும் எண்ணூற்று இருபது பிள்ளைகளில் 650 பேர் வள்ளலார் இல்லத்தில் தங்குகிறார்கள். அவர்களில் 190 பேர் இலவசமாக உணவு பெறும் ஹரிஜனப் பிள்ளைகள். இவர்களுக்காகச் சமையல் நடக்கும் இடத்துக்குச் சென்று பார்த்தேன். சமையல் அறை மிகச் சுத்தமாயிருப்பதுடன், விறகு அதிகம் செலவாகாத புது முறை அடுப்புகளை அமைத்திருக்கிறார்கள். பொருள்களின் சத்து வீணாகாத முறையில் சமையல் செய்யப்படுகிறது. சமையலுக்காகத் தயாரித்து வைத்திருந்த பொருள்களைப் பார்த்தேன். ஒரு பெரிய அண்டா நிறைய முளைக் கட்டின பயறும் இன்னொரு அண்டாவில் முளைக் கட்டின கடலையும் நிறைந்திருந்தன. இப்படி முளைக் கட்டி முளை வெளியில் தோன்றிய பிறகு அப்பொருள்களைச் சமைத்தால் அவற்றில் விடமின் சத்து நிரம்ப இருக்குமாம். ஒன்றும் அறியாதவரும் ஒன்றும் இயலாதவருமான திரு மாசிலாமணி முதலியார் மேற்படி இரகசியத்தைத் தெரிந்து கொண்டு, அத்தகைய தானியங்களை முளைக் கட்டிச் சமைக்க ஏற்பாடு செய்திருக்கிறார். பொதுவாக, குழந்தைகளின் தேக நலத்துக்கும் வளர்ச்சிக்கும் அவசியமான சத்துக்கள் போதுமான அளவு கலந்த உணவு அளிக்கப்படுகிறது.

ஆனால் தேக திடத்துக்கும் உடல் நலத்துக்கும் நல்ல உணவு மட்டும் போதுமா! போதாது! தேகாப்பியாச முறைகளிலும் பிள்ளைகளுக்குப் பயிற்சி வேண்டும். இத்துறையிலும் மிக்க கவனம் செலுத்தி வருகிறார்கள். எல்லாக் குழந்தைகளுக்கும் யோகாசன முறைகளும் சூரிய நமஸ்காரமும் கற்பிக்கப்படுகின்றன. நூற்றுக் கணக்கான பிள்ளைகள் ஒரே சமயத்தில் ஒரே மாதிரி சர்வாங்காசனம் செய்யும் காட்சியைப் பார்ப்பதற்கே மகிழ்ச்சிகரமாயிருந்தது. இதைத் தவிர, சாதாரண தேகாப்பியாச முறைகள், தாண்டல் குதித்தல் ஓடல் முதலிய விளையாட்டுக்கள், இசையுடனும் தாளத்துடனும் சேர்ந்த உற்சாகமான 'பிரதர்சனி' விளையாட்டுக்கள், காண்பவர்களைக் கைதட்டச் செய்யக் கூடிய சர்க்கஸ் வித்தை விளையாட்டுக்கள், — ஆகியவற்றிலும் பிள்ளைகள் தேர்ந்திருக்கிறார்கள். இவையெல்லாம் திரு மாசிலாமணி முதலியார் ஒருவரே சாதித்து விட்டவை என்று சொல்ல முடியுமா! ஒரு நாளும் முடியாது. இன்னின்னது செய்தால் நல்லது என்று அவர் யோசனைதான் சொல்லியிருக்கக் கூடும். பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியரும் மற்ற எல்லா ஆசிரியர்களும் சேர்ந்து ஒத்துழைத்துத் தான் இவ்வளவும் சாத்தியமாகியிருக்கின்றன.

பொதுவாக, வாலாஜாபாத் இந்து மத பாடசாலையில் கல்விப் பயிற்சி பெற்று வெளியேறும் மாணவர்கள் வேறு எந்தக் கல்வி ஸ்தாபனத்திலிருந்து வெளியேறுகிற மாணவர்களைக் காட்டிலும் தேக திடத்துடன் இருப்பார்கள் என்று உறுதியாகச் சொல்லலாம்.

* * *

ஒரு கல்வி ஸ்தாபனத்தின் உயர்வை, அங்கே குழந்தைகளுக்கு அளிக்கப்படும் ஏட்டுக் கல்வியைக் கொண்டு மட்டும் நிர்ணயிக்கக் கூடாது. குழந்தைகள் தங்கள் கைகளையும் அறிவையும் பயன்படுத்திச் செய்வதற்கு அளிக்கப்படும் தொழிற் பயிற்சியைக் கொண்டே நிர்ணயிக்க வேண்டும். இதுவே நமது நாட்டின் முன்னேற்றத்தில் கவலை கொண்ட மாபெரும் அறிவாளிகளின் கொள்கை. இந்தத் துறையிலும் வாலாஜாபாத் இந்து மத பாடசாலை முன்னணியில் இருந்து வருகிறது. இங்கே, கைத்தறிகள் அலங்காரத்துக்காக வைத்திருக்கவில்லை. பிள்ளைகள் உண்மையாகவே துணி நெய்கிறார்கள். நெய்த துணிகள் விற்கப்படுகின்றன. பிள்ளைகள் கையினால் வேலை செய்து பித்தான்கள், விளையாட்டுச் சாமான்கள் முதலியவை உற்பத்தி செய்கிறார்கள். அவை கண் காட்சிக்கு உரியன மட்டும் அல்ல; விற்பனையாகக் கூடியவை.

நான் சென்ற சமயத்தில், உயர்திரு மாணிக்கம் செட்டியார் அவர்கள் பத்தாயிரம் ரூபாய் செலவில் வாங்கி அளித்த அச்சகம் திறந்து வைக்கப்பட்டது. இதில் பிள்ளைகள் அச்சுக் கோக்கும் கலையைக் கற்றுக் கொள்வார்கள். இன்னும் தையல், புகைப்பட மெடுத்தல் முதலிய பயிற்சிகளும் அளிக்கப் படுகின்றன.

* * *

பிள்ளைகளின் பொது அறிவு வளர்ச்சிக்காகச் செய்திருக்கும் ஏற்பாடுகள் நம்மைத் திகைக்கச் செய்கின்றன. மாணவர் இல்லம், பாடசாலை, தொழிற்சாலை ஆகியவற்றின் விரிந்து பரந்த சுவர்கள் எல்லாம் பிள்ளைகளுக்குப் பொது அறிவைப் புகட்ட உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. சிறுவர்களுக்கு,—ஏன், பெரியவர்களுக்குக் கூட,— தெரிந்திருக்க வேண்டிய முக்கியமான பொது அறிவுச் செய்திகளையெல்லாம் அந்தச் சுவர்களில் எழுதியிருப்பதைக் கொண்டே தெரிந்து கொள்ளலாம். சுவர்களில் எழுதியிருப்பதை அடிக்கடி பிள்ளைகள் பார்க்க நேருவதால், அவை என்றும் மறந்து போகா வண்ணம் பிள்ளைகளின் மனத்திரையில் பதிந்து விடுகின்றன. உலக சரித்திரம், பாரத நாட்டின் சரித்திரம், தமிழகத்தின் சரித்திரம் ஆகியவற்றை முக்கியமான காலப் பகுதிகளாகப் பிரித்து எழுதியிருக்கிறார்கள். அம்மாதிரியே பூகோள சாஸ்திரத்தின் முக்கியமான விவரங்களையெல்லாம் படங்களுடனே சுவர்களில் தீட்டியிருக்கிறார்கள். உலகத்து மலைச் சிகரங்களில் உயர்ந்தவை எவை! உலகத்திலுள்ள பெரிய அணைக்கட்டுகள் எவை! பல்வேறு தேச மக்களின் சராசரி வயது என்ன! பல்வேறு விலங்குகள், பறவைகளின் சராசரி வயது என்ன! உணவு வகைகளில் சுண்ணாம்புச் சத்து உள்ளவை எவை! இரும்புச் சத்து உள்ளவை எவை! உயிர்ச்சத்துக்களாகிய விடமின் ஏ, பி, சி, ஆகியவை எந்தெந்தக் கறி காய் கனி வர்க்கங்களில் எவ்வளவு இருக்கின்றன! சென்னை இராஜ்யத்து மாவட்டங்களில் என்னென்ன விளை பொருள்கள்—செய் தொழில்கள்—

முக்கியமானவை! தமிழ் இலக்கியங்களில் சங்க காலத்தவை எவை! சோழர்காலத்தவை எவை! தக்காளிச் செடி எந்த மாதத்தில் பயிரிட வேண்டும்! மற்றக் கறிகாய்கள், தானியங்கள் எந்தெந்த மாதத்தில் பயிர் செய்வது நலம்!—இவ்விதமாக எத்தனை எத்தனையோ கேள்விகளுக்கு இந்தப் பாடசாலைச் சுவர்கள் விடை தருகின்றன.

இவ்வளவுடன், திருக்குறள் அறத்துப் பாலிலிருந்தும் பொருட்பாலிலிருந்தும் 105 பாடல்கள் தேர்ந்தெடுத்துப் பொழிப்புரையுடன் வரையப்பட்டிருக்கின்றன.

அண்மையில், சென்னை மேல் சபையில், டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் அவர்கள் சென்னை போன்ற நகரங்களில் சுவர்கள் எவ்வளவு துர் உபயோகத்துக்கு ஆளாகின்றன என்று கூறி வருத்தப் பட்டார்கள். ராஜாஜியும் அதை ஆமோதித்தார்கள்.

இந்தப் பெரியார்கள் வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக்கு ஒரு முறை சென்று அங்குள்ள சுவர்களைப் பார்வை யிட்டால், அவர்கள் உள்ளங்கள் மகிழும் என்று நம்புகிறேன்.

அஜந்தா குகைச் சுவர்களையும், தஞ்சைப் பெரிய கோவில் சுற்று மதில் சுவர்களையும் நம் முன்னோர்கள் அற்புதமான உயிர் ஓவியங்களைத் தீட்ட உபயோகப் படுத்தினார்கள்.

அடுத்தபடியாக, நமது காலத்தில் கட்டிடங்களின் சுவர்களை அருமையாகப் பயன் படுத்தியிருப்பவர் வாலாஜாபாத் மாசிலாமணி முதலியார் அவர்கள்தான் என்று கூறலாம்!

சுவர்களிலே எழுதியிருந்த எத்தனையோ அரும் பெரும் உண்மை பொருந்திய வாக்கியங்களில், வள்ளலார் இல்லத்தின் மாணுக்கர்கள் தினந்தோறும் மூன்று நேரமும் பிரார்த்தனை செய்யும் வாக்கியங்கள் என் கவனத்தைக் கவர்ந்தன. இரவு உணவு அருந்தும்போது பிள்ளைகள் எல்லாரும் "ஆண்டவனே! தங்கள் திருவருளால் நாங்கள் உண்கின்றோம்......உலகிலுள்ள மக்கள் அனைவருக்கும் இதுபோழ்து உணவளிக்கத் தங்கள் அருளை வேண்டுகிறோம்" என்று பிரார்த்தனை செய்வது வழக்கமாம்.

தமிழ் நாட்டில் பிரார்த்தனையின் சக்தியில் அபார நம்பிக்கை புள்ளவர்கள் இருவர் இருக்கிறார்கள் என்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். அந்த இருவரில் ஒருவர் முதன் மந்திரி ராஜாஜி அவர்கள்; மற்றொருவர் திரு மாசிலாமணி முதலியார் அவர்கள்.

சென்ற ஆறு ஆண்டு காலமாகத் தமிழ் நாட்டில் வான மழை பொய்த்திருந்தும் எப்படியோ நாம் எல்லாரும் உணவருந்தி உயிரோடு வாழ்ந்து வருவது வாலாஜாபாத் பிள்ளைகளின் பிரார்த்தனையின் பயன்தானே என்று தோன்றியது!

ஒன்றும் இயலாதவரான திரு மாசிலாமணி முதலியார் இவ்வளவு அரும்பெரும் சாதனைகளைச் செய்திருப்பதின் இரகசியம் என்ன வென்பதும் இப்போது விளங்குகிறது அல்லவா! ஸ்ரீராமலிங்க வள்ளலாரின் சமரச சன்மார்க்க சமயத்தில் பற்றுக் கொண்ட திரு மாசிலாமணி முதலியார் அவர்களின் தெய்வ நம்பிக்கையும் பிரார்த்தனையின் சக்தியுந்தான்! வேறு என்ன இருக்க முடியும்!

# அவரைத் தெரியுமா?

அப்பு ராவ் அந்த 'பஸ் ஸ்டாண்'டில் வந்து நின்றபோது, ஒருவரோ இருவரோ தான் அங்கே பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டு நின்றிருந்தனர்.

அவன் வந்த சில விநாடிகளில் எல்லாம் இன்னும் நால்வர் நாலு திசையிலு மிருந்து வந்து சேர்ந்தனர்.

அடுத்த அரை நிமிஷத்தில் ஒரு பஸ் வந்து நின்றது. தூரத்திலேயே அதன் தலை எழுத்தை — அதாவது நம்பரைப் பார்த்து விட்டு 'நம்ம பஸ் அல்ல' என்று அலட்சியமாக இருந்தான் அப்பு ராவ்.

அடுத்தாற்போல் இன்னொரு பஸ் வந்து நின்றது. அதன் எண்ணிக்கையையும் பார்த்து 'இந்த பஸ் அல்ல' என்று பின் வாங்கினான்.

இதற்குள் அந்த ஸ்டாண்டில் பத்துப் பேருக்கு மேல் கூடி விட்டனர்.

'ரயில் சிநேகம்' என்று ஒரு வார்த்தையுண்டல்லவா? அம்மாதிரி 'பஸ் ஸ்டாண்டு சிநேகம்' என்ற வார்த்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டிய காலம் இது. பஸ் ஸ்டாண்டில் நம்மைப் போல் வெகு நாழிகையாக இன்னொருவர் காத்துக் கொண்டிருந்தாரானால் அவர்பால் இயற்கையாக ஒரு அநுதாபம் ஏற்படுகிறது; பேசத் தோன்றுகிறது.

"ஏன் ஸார்! நீங்களும் அந்தப் பத்தாம் நம்பர் பஸ்ஸுக்காகத்தான் காத்திருக்கிறீர்களோ?" என்று கேட்டு வைக்கிறோம்.

"ஆமாம், ஸார்! நான் ஒரு அவசர காரியமாகப் போக வேண்டும். இன்றைக்குப் பார்த்து பஸ் காலா காலத்தில் வர மாட்டேன் என்கிறது!" என்று அலுத்துக் கொண்டே சொல்வார்.

இதற்குள் ஒரு பஸ் வரும். ஒரு வேளை இது பத்தாம் நம்பர் பஸ்ஸாக இருக்குமா என்று ஆவலுடன் பார்த்தால், அது ஒன்பதாம் நம்பர் பஸ்ஸாக இருக்கும்.

"நாம் எந்த பஸ்ஸுக்காக வந்து நிற்கிறோமோ, அந்த பஸ்ஸைத் தவிர பாக்கி அத்தனை பஸ்ஸும் வந்துவிடும்!......" என்று கூறுவோம்!

இப்படித்தான் சிநேகம் ஆரம்பமாகும்.

அன்று அப்பு ராவ், பஸ் ஸ்டாண்டில் வெகு நேரமாகக் காத்துக்கொண் டிருந்தபோது, பக்கத்தில் நின்றிருந்த ஒருவர் அப்புராவிடம் அனுதாபம் கொள்ளலானார். "எந்த பஸ்ஸுக்காகக் காத்திருக்கிறீர்கள்?" என்று விசாரித்தார். பின்னர் பேச்சுத் தொடர்ந்தது. சுவாரஸ்யமாகப் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களுக்குத் தேவைப்பட்ட பஸ் வரவில்லை.

இதற்குள், அந்தப் பெரியசாலையின் எதிர்ப் பக்கத்தில் போய்க் கொண்டிருந்த ஒருவரைச் சுட்டிக் காட்டி, "அதோ போகிறார் பாருங்கள், தலை குனிந்து, தொப்பா போட்டுக்கொண்டு அவரை உங்களுக்குத் தெரியுமா, ஸார்?" என்று கேட்டார் பஸ் ஸ்டாண்டு நண்பர்.

அப்பு மெள்ள "ஏன்?" என்று கேட்டு வைத்தான்.

"அவர் ஒரு காலத்தில் எப்படியிருந்தவர் தெரியுமா? என்ன ஆடம்பர வாழ்க்கை! என்ன அமர்க்களம் போங்கள்! எப்பொழுதும் விலை உயர்ந்த மேல் நாட்டு உடைகளைத்தான் அணிவார்.

"நல்ல வெய்யில் காலத்தில் கூட, ட்வீட் கோட்டும் பாண்டும்தான் அணிவார்.

"ஹாட்டும் பூட்ஸும் இல்லாமல் வெளியே கிளம்பமாட்டார்.

"ஏன், வாழ்க்கையில் அனுபவிக்க வேண்டிய சகல சுகங்களையும் அனுபவித்தவர் ஸார், அவர்! இன்று இப்படி அடிமேல் அடி வைத்துக் காலில் செருப்புகூட இல்லாமல் நடந்து போகிறார்! பாவம்! கால வித்தியாசம்!" என்று ரொம்பவும் அங்கலாய்த்தார் அப்புராவின் புதிய நண்பர்.

"ஓ! அவரை எனக்குத் தெரியும் ஸார்!" என்றான் அப்பு.

இதற்குள் மூன்று நான்கு பஸ்ஸுகள் ஸ்டாண்டில் வந்து ஒன்றன் பின் ஒன்றாக நின்றன. பிரயாணிகள் இறங்கும் வண்ணமாகவும் ஏறும் வண்ணமாகவும் இருந்தனர். சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்த அப்புராவும் அவன் நண்பரும் இதைக் கவனிக்காமலில்லை. வந்த பஸ்ஸுகளில் ஒன்றாவது அவர்களை ஏற்றிச் செல்லக் கூடிய பஸ்ஸாக இருக்கவில்லை. அதனால் பேச்சைத் தொடர்ந்தனர். அதுவும் இத்தனை நாழிகை தான் வர்ணித்த நபரைத் தனக்குத் தெரியும் என்று அப்பு ராவ் கூறியதும், அந்த நண்பர் ஆச்சரியப்பட்டுப் போனார்!

"உங்களுக்குத் தெரியுமா, அவரை? எப்படி?" என்று கேட்டார்.

அப்புராவ் "எப்படியாவது? என் சொந்த அத்திம்பேர் ஸார், அவர்! என் அக்காவின் அகமுடையான்" என்றான்.

இதைக் கேட்டதும் அந்த நண்பர் முகம் எப்படியோ போய் விட்டது.

அவருக்கு அங்கே இருக்கப் பிடிக்காமல், எங்கேயாகிலும் தலைதெறிக்க ஓடிப் போகலாமா என்று தோன்றி விட்டது போலும்.

கடைசியாக வந்து நின்ற பஸ்ஸும் புறப்பட்டு விட்டது. நண்பர் விழுந்தடித்துக் கொண்டு ஓடிப் போய் அதில் தொத்திக் கொண்டார்.

அப்புராவுக்கு அந்த மனிதரின் செய்கை ஒன்றும் புரியவில்லை.

அவர் தொத்திக் கொண்ட பஸ்ஸின் எண்ணிக்கை பார்த்தான்—51 என்றிருந்தது. "அடாடா! அவர் 43-ம் நம்பர் பஸ்ஸில் அல்லவா போக வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். அட, பாவி மனுஷ்யா!" என்று எண்ணிக் கொண்டான் அப்பு.

மேற்கண்ட சம்பவத்தை என்னிடம் கூறி விட்டு அப்பு ராவ், ஒரு வேலையும் எனக்கு வைத்து விட்டான். அதாவது, அவனுடைய 'பஸ் ஸ்டாண்டு' நண்பரைப் பார்த்தால், அவனுடைய அத்திம்பேர் அப்படியொன்றும் இரக்கப்படவேண்டிய நிலைமையில் இல்லை யென்றும், இப்பொழுது இந்த வேஷத்தில் நடப்பதற்குக் காரணம் அவர் மனத்தின் விசித்திரப் பண்பைத் தவிர வேறில்லை என்றும் தெரிவிக்க வேண்டுமாம். எப்படி யிருக்கிறது, கதை? ஆனால் இப்பொழுது நான் என்ன செய்ய முடியும்? அப்புவின் பஸ் ஸ்டாண்டு நண்பரைப் பார்த்தீர்களானால் நீங்கள் சொல்லி விடுங்கள்.—வேங்கு.

# தஞ்சைக் கலைக்காட்சி



2



1. தஞ்சைக் கலைக் காட்சியில் கலைத் தெய்வத்தின் உருவச் சிலையை ராஜாஜி திறந்து வைத்தார்.
2. கலைக் காட்சியில் வைத்திருந்த அற்புதமான தெய்விகச் சிலைகளை ராஜாஜி பார்வையிடுகிறார்.
3. தஞ்சைக் கலெக்டர் பழனியப்பன் ராஜாஜியிடம் கலையைப் பற்றி ஏதோ ரஸமாகச் சொல்லி யிருக்க வேண்டும்.
4. சங்கீத மகாலில் கூடி யிருந்த மகா சபையில் சகோதரிகள் ராஜாஜியின் பிரசங்கத்தைக் கேட்டு மகிழ்ந்து கொண்டிருக்கின்றனர்.



3



4







1. சரஸ்வதி மகாலுக்கு எதிரே யுள்ள சரபோஜியின் சிலையும் சிவக் காட்சியின் விக்ரகங்களும்.
2. ஏட்டுச் சுவடிகளை ராஜாஜி கூர்ந்து பார்க்கிறார்.
3. கள்வனின் காதலி நாடகத்தில் மிஸஸ் போலீஸ் இன்ஸ்பெக்டர் "புரிஞ்சுதோ" என்று கேட்கும் போது ஏற்பட்ட குதூகலம்.
4. கள்வன் முத்தையன் வேஷத்தில் அபாரமாக நடித்த ஸ்ரீ டி. கே. ஷண்முகத்தை ஸ்ரீ பாஸ்கரத் தொண்டைமான் பாராட்டுகிறார்.







போட்டோ: எம். டி. கிரேஷ்

# தமிழ்க்களஞ்சியம்

## டி.கே.சி

### 25. இடம் பார்க்கிறது ஹாஸ்யம்!

நல்ல பாம்பு என்றால் எல்லாருக்கும் பயந்தான். ஆனாலும் சில பிரதேசங்களில் நல்ல பாம்பைக் கண்டால் யாரும் பயப்படுகிறதில்லை.

நல்ல பாம்பைக் கொல்ல மாட்டார்கள்; பால் விட்டு உபசாரம் செய்வதும் உண்டு. இதெல்லாம் காரணமாக நல்ல பாம்பும் மனிதர்களைக் கண்டால் கலையாது, கடிக்கவும் செய்யாது.

கம்பர் இருந்த ஊரில் நல்ல பாம்புக்கும் மக்களுக்கும் இடையே இருந்த உறவு அப்படி.

ஒருநாள் ஒரு வீட்டில் பத்து இருபது பேர் உட்கார்ந்திருக்கிறார்கள். கம்பரும் இருக்கிறார். அவருடைய பாடல்களைக் கேட்டு ஒரே பரவசத்தில் இருக்கிறார்கள் எல்லாரும்.

அந்தச் சமயம் வழி தப்பி அந்த இடத்துக்குள் வந்து விட்டது ஒரு நல்ல பாம்பு. ஒருவரும் கலவரம் பண்ணவில்லை. அப்படியே உட்கார்ந்திருந்தார்கள். கம்பர் மெள்ளக் கையைத் தட்டி 'பாம்பே, மெள்ள வெளியே போய்விடு' என்று பாம்பை நோக்கிச் சொன்னார். பாம்பும் அப்படியே உருவிப் போய்விட்டது.

பயம் யாதும் இல்லாத காரணத்தினால் ஹாஸ்யம் உதித்தது கம்பரது உள்ளத்தில். எப்படி? பாம்பை ரொம்ப ரொம்ப உபசாரம் செய்வதாக ஹாஸ்யப் போக்கு.

**ஆழியான் பள்ளி**
**அணையே, அவன்கடைந்த**
**வாழி வரையின்**
**மணித்தாம்பே—பூழியான்**
**பூணே, புரம்எரித்த**
**பொற்சிலையிற் பூட்டுகின்ற**
**நாணே அகல**
**நட.**

[ஆழியான் பள்ளி அணையே: சக்கரத்தை ஏந்திய திருமாலின் பள்ளியே; வாழி வரையின் மணித் தாம்பே: பாற்கடலை மந்தரகிரி மத்தாகவும் வாசுகியாகிய சர்ப்பம் தாம்புக் கயிறாகவும் கொண்டு திருமால் கடைந்தார்; பூழியான் பூணே: விபூதி அணிந்த சிவ பெருமானது ஆபரணமே; சிவபெருமான் திரிபுரத்தை எரித்தார். எப்படி: மேருகிரியை வில்லாக வளைத்து ஆதிசேஷனை நாணாக ஏற்றி எரித்தார். நாணே அகல நட: பாம்பே மெள்ள வெளியே போ பார்க்கலாம்!]

இத்தனை உபசாரம் சொன்னால் இணங்காமல் இருக்கவா செய்யும் அந்தப் பாம்பு.

பாடலைப் பாடப் பாட ஹாஸ்யம் பொங்கிக் கொண்டே வரும். சோதித்துப் பாருங்கள் கொஞ்சம். இனி

• •
•

காதலுக்குள் இடம் பார்க்கும் ஹாஸ்யம்.

பாண்டியனுக்குப் பல காதலிகள். ஒரு காதலியோடு தானே அவன் இருக்கக் கூடும். மற்றக் காதலிகள் பாடு ஏமாற்றமும் ஆயாசமும் தானே.

ஏமாற்றத்துக்கு உள்ளானவர்கள் இரவைப் பார்த்துச் சொல்லுகிறார்கள், விடிந்து தொலையேன் என்பதாக.

பாண்டியனோடு உடன் இருக்க நேர்ந்தவர்களோ 'இரவே வேகமாய்ப் போய் விடாதே. மெள்ள இருந்து போ' என்று இரவை உபசரிக்கிறார்கள். இரவின் பாடு கொஞ்சம் கஷ்டந்தானே.*

**புல்லாதார் வல்லே**
**புலர்கென்பார்; புல்லினார்**
**நில்லாய் இரவே**
**நெடிதென்பார்!**

பாண்டியனது அகலம், அதாவது மார்பைப் புல்லாதாரும் புல்லினருமாக இப்படிப் பேசுகிறார்கள்.

**—நல்ல**
**விராமலர்த் தார்மாறன்**
**ஒண்சாந் தகலம்;—**

புல்லாதார் புல்லினர் அப்படிச் சொல்லுவார்கள். இயல்புதானே.

கவிஞருக்கு ரொம்ப இரக்கம் உண்டாய் விட்டது!

**புல்லாதார் வல்லே**
**புலர்கென்பார்; புல்லினார்**
**நில்லாய், இரவே**
**நெடிதென்பார்—நல்ல**

*இவ்விரு நிலைகளை இவ்விதழ் அட்டைச் சித்திரமாக நமது சித்திரக்காரர் தீட்டி யிருக்கிறார்.

விராமலர்த் தார்மாறன்
ஒண்சாந் தகலம் ;—
இராஅளிப் பட்ட(து)
இது. —முத்தொள்ளாயிரம்

[புல்லாதார் : மார்பை அணையப் பெறாதவர் ; வல்லே புலர்கென்பார் : சீக்கிரமே விடிந்து விடு என்பார் ; நல்ல விராமலர்த் தார்மாறன் : பல வாசனைப் புஷ்பங்களை விரவித் தொடுத்த மாலையை அணிந்த ; ஒண் சாந்து அகலம் : அழகிய நிறம் கொண்ட சந்தனம் பூசிய மார்பை ; அகலம் : மார்பை ; புல்லாதார் புலினுர் என்பது முடிபு.]

கவிஞரது பரிவு வருகிறது இனி. அடடா, இரவின் கஷ்டந்தான் என்ன ! 'நீ வேண்டாம்' என்று சிலர் வெளியே பிடித்துத் தள்ளவும், வேறு சிலர் 'இரவே போய்விடாதே. இரு. இன்னும் கொஞ்சம் இரு' என்று சொல்லவும் ஆயிற்றே. கஷ்டந்தான் இரவின் காரியம்.

இரா அளிப் பட்ட(து)
இது !

காதலுக்குள் ஹாஸ்யம் எப்படிப் புகுந்து கொண்டது என்பதைப் பார்த்தோம். இனி, துயரத்துக்குள்ளும் மன வேதனையிலிருந்தும் வரும் ஒரு வித ஹாஸ்யம் என்பதும் மனுஷ்ய இயல்பைச் சேர்ந்ததுதான்.

* *
*

கூவம் என்கிற ஊரில் (செங்கல்ப்பட்டு ஜில்லா) ஒரு தமிழ் வள்ளல். நாராயண முதலியார் என்று பெயர். புலவர்களையும் தமிழையும் ரொம்ப ரொம்ப ஆதரித்து வந்தார். திடீர் என்று இறந்து போனுர். புலவர்களுடைய மனம் இடிகிறது.

ஒரு புலவர் புலம்புகிறுர்.

இடுவோர் சிறிதிங்(கு)
இரப்போர் பெரிது !
கெடுவாய் நமனே
கெடுவாய்—படுபாவி !
கூவத்து நாரணனைக்
கொன்ருயே,—கற்பகப்பூங்
காவெட்ட லாமோ
கரிக்கு.

அடுப்புக்கும் கொல்லுலைக்கும் கரி வேண்டுமாளுல் வேறு மரம் கிடையாமலா போயிற்று. கற்பகக் காட்டை அல்லவா வெட்டித் தொலைத்தாய், வாழ்ந்து போனுய் நமனே, வாழ்ந்து போனுயடா !

புண்பட்டுத் துடிக்கிற இதயத்திலிருந்து இப்படி வருகிறது ஹாஸ்யம்.

ஹாஸ்யம் இப்படியெல்லாம் இடம் பார்க்கிறது தங்க !


ஸ்பென்ஸரின்
ஊக்கமளிக்கும்
பரிசுத்தமான
பானங்கள்
*
* லெமனேட்
* ஆரஞ்சு கிரஷ்
* ஜிஞ்சர் ஏல்
* கோலா
* ஜிஞ்சர் பீர்
* கொயினு டானிக்
*
தென் இந்தியா
முழுவதும்
LEMONADE
SPENCER'S SODA WATER
SPENCER & Co.
ads


'ஸிஸர்ஸ்'
1900
1925
1953
SCISSORS CIGARETTES
W.D. & H.O. WILLS
மூன்று
தலைமுறைகளாகப் பிரசித்தி பெற்றவை



# விசித்திரக் கட்டு

குண்டுமணி

மணிபுரி மாளிகையில் விசித்திர வர்மன் தர்பார் மண்டபத்தில் கொலு வீற்றிருந்தான். மந்திரி, பிரதானிகளும், அரண்மனைச் சேவகர்களும், மணிபுரி மக்களும் திரளாகத் தர்பார் மண்டபத்தில் கூடியிருந்தனர்.

விசித்திர வர்மன் ஒரு விசித்திரப் பேர்வழி. அவனுக்குப் பிரசங்கம் செய்து பிறர் பாராட்டைப் பெற வேண்டும் என்பதில் அலாதி ஆசை. அந்த ஆசை நாளுக்கு நாள் பெருகி வளர்ந்து அவன் கடமையையும் அது மறக்கச் செய்து விட்டது.

மணிபுரி மன்னன் அன்று பிரமாதமாகப் பிரசங்கமாரி பொழிந்து கொண்டிருந்தான். அவனுடைய பேச்சில் ஹாஸ்ய வெடிகள் மலிர்ந்தன. அவைகளைக் கேட்டு அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் "பலே!" "பிரமாதம்!" "சபாஷ்!" என்று கூறித் தலையை யாட்டிப் பிரசங்கத்தைப் பாராட்டினர். விசித்திர வர்மனும் அந்தப் பாராட்டுதலில் மகிழ்ந்து நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டிருந்தான்.

மந்திரி முதலிய பிரமுகர்கள் தங்கள் கடமைகளை மறந்து அரசனுடைய சொற்பொழிவில் மெய்மறந்திருந்தார்கள். அரண்மனைச் சேவகர்கள் தங்கள் வேலைகளை யெல்லாம் விட்டு விட்டு வந்து பிரசங்கத்தைக் கேட்டு ரஸிப்பதில் முனைந்திருந்தார்கள். நகர மக்கள் தங்கள் தொழில்களை யெல்லாம் மறந்து அங்கே கூடியிருந்தார்கள். அவர்கள் அந்தப் பிரசங்கத்தைக் கேட்டுத்தான் ஆக வேண்டும். அதைக் கேட்க வாராதவர்களுக்குக் கடுந் தண்டனை யன்றோ! அவர்கள் வேலையை யெல்லாம் மறந்து வர வேண்டியதுதானே? அரசனுடைய கட்டளையை மீற அவர்களுக்குத் தைரியம் ஏது?

அரசன் ஆட்சிப் பணியை மறந்ததால் நாட்டிலே அராஜகம் தலை யெடுக்கத் தொடங்கியது. மக்கள் தொழிலை மறந்ததால் பொருள் உற்பத்தி குறைந்தது. நாட்டிலே குழப்பமும், பஞ்சமும் தலை விரித்தாடத் தொடங்கின. ஆனால் விசித்திர வர்மனுடைய பிரசங்கம் நாள் தவறாமல் நடந்து வருவதும், அதற்கு மக்கள் திரண்டு வருவதும் நின்றபாடில்லை.

அன்று இரவு அரசன் விசித்திர வர்மன் இரவு விருந்தை எதிர் பார்த்து வெகு நேரங் காத்திருந்தான். அவன் பசி அதிகமாயிற்றே தவிர உணவு வந்து சேரவில்லை. அரசனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. உடனே சமையல் அதிகாரியை அழைத்து வருமாறு உத்தரவிட்டான். சேவகன் உத்தரவைச் சிரமேற் கொண்டு அதை நிறைவேற்ற விரைந்தான்.

சமையல் அதிகாரி அரசனின் ரௌத்ராகாரத்தைக் கண்டு அரண்டு போய் அவன் முன் வந்து நின்றான்.

"என்ன? இன்று ஏன் எனக்குச் சரியான நேரத்தில் விருந்துக்கு ஏற்பாடு செய்ய வில்லை? இத்தகைய தவறு செய்ததற்காக உனக்குச் சிறைத் தண்டனை விதித்திருக்கிறேன்" என்று கடுங் கோபத்துடன் கூறினான் விசித்திர வர்மன்.

"அரசே! தங்கள் பிரசங்கத்துக்கு வந்து விட்டதால் சமையல் பணியைக்

கவனிப்பதில் சிறிது கால தாமதமாகி விட்டது. என்னை மன்னிக்க வேண்டும்..." என்று கலங்கிய குரலில் பதிலளித்தான் சமையல் அதிகாரி.

"பேஷ்! நீயும் என் பிரசங்கத்துக்கு வந்திருந்தாயா?" என்று கேட்ட அரசனின் முகத்தில் கடுமை மறைந்தது.

"ஆம், மகா ராஜா! தங்கள் பிரசங்கத்தைக் கேட்டு அப்படியே மெய்மறந்து போய் விட்டதால்தான் விருந்துக்குத் தாமதம் ஏற்பட்டு விட்டது!"

"பேஷ்! என் பிரசங்கத்தை நன்ருக ரசித்திருக்கிருயே? இன்றை யிலிருந்து உன்னை அரண்மனைக் காவலராக நியமித்திருக்கிறேன்" என்ருன் மன்னன் மகிழ்ச்சி பொங்க.

சமையல் அதிகாரி அரசனை வணங்கி விட்டுத் தன்னுடைய பதவி உயர்ந்ததைக் கண்டு ஆனந்தத்துடன் சென்ருன்.

வழக்கம் போல் அன்றும் விசித்திர வர்மன் தர்பார் மண்டபத்தில் அருமையாகச் சொற் பொழி வாற்றிக் கொண்டிருந்தான். திடீரென்று அவன் முன்னுல் அழகிய வேலைப்பாடமைந்த தங்கத் தட்டு ஒன்று வந்து விழுந்தது.

மன்னன் ஆவலுடன் குனிந்து அந்த அழகிய தங்கத் தட்டைக் கையில் எடுத்தான். என்ன ஆச்சரியம்! தங்கத் தட்டு அவன் கை பட்டதும் மண் தட்டாக மாறி விட்டது. உடனே அரசன் ஆச்சரியம் தாங்க முடியாமல், "என்ன! பளபளவென்று மின்னும் தங்கத் தட்டு என் கை பட்டதும் மண் தட்டாக மாறி விட்டதே? இதன் விசித்திரத்தை யாராவது கண்டு பிடித்துக் கூற முடியுமா?" என்று வினவினுன். பிறகு அரசன் அந்த அதிசயத் தட்டைக் கீழே வைத்தான். கீழே வைத்ததும் மண் தட்டு அழகிய தங்கத் தட்டாக ஜொலித்தது.

இத்தகைய விசித்திரமான தட்டைப் பார்த்து அங்கு கூடி யிருந்தவர்கள் ஆச்சரியக் கடலில் மூழ்கினர். ஒவ்வொருவராக வந்து விசித்திரத் தட்டைப் பார்வையிட்டனர். அவர்கள் கைப் பட்டதும் தங்கத் தட்டு மண் தட்டாக மாறி விட்டது. ஆனுல் தரையில் வைத்தால் தங்கத் தட்டாகிக் கண்களைப் பறித்தது.

விசித்திரத் தட்டின் பிராபல்யம் நாடு நகர மெல்லாம் பரவியது. தங்கத் தட்டின் இரகசியத்தை வெளியிடுபவர்களுக்கு நூறு பவுன் பரிசு தருவதாக அறிவிக்கச் செய்தான் விசித்திர வர்மன்.

மக்கள் திரள் திரளாக வந்து அந்த விசித்திரத் தட்டைப் பார்க்கவும், பரிசையடைவதற்கு முயற்சியும் செய்து பார்த்தனர். ஆனுல் முயற்சி பலனளிக்கவில்லை.

ஒரு நாள் அயல் தேசத்தவன் ஒருவன் விசித்திரத் தங்கத் தட்டைக் கேள்விப்பட்டு மணிபுரிக்கு வந்தான். அந்தச் சமயத்தில் தர்பார் மண்டபத்தில் மன்னனின் பிரசங்கம் நடந்து கொண்டிருந்தது.

அரண்மனைச் சேவகர்கள் அயல் தேசத்தவனை அரசன் முன்னிலையில் கொண்டு போய் நிறுத்தினர். விசித்திர வர்மன் தன் பிரசங்கத்தைச் சிறிது நிறுத்தி விட்டுப் புதிய மனிதனை ஏற இறங்கப் பார்த்தபடி "தாங்கள் யார்? அயல் தேசத்தவர் போலிருக்கிறதே? தங்களுக்கு விசித்திரத் தங்கத் தட்டின் இரகசியம் தெரியுமா?" என்று கேலியாகக் கேட்டான்.

"ஆம், அரசே! நான் அயல் தேசத்தவன்தான். தங்கள் நாட்டிலுள்ள விசித்திர தங்கத் தட்டைப் பற்றிக் கேள்விப் பட்டுத் தான் வந்தேன்" என்று பணிவுடன் பதிலளித்தான் அயல் நாட்டவன்.

விசித்திர வர்மன் வியப்புடன் ஒரு தடவை அவனை நோக்கி விட்டுத் தங்கத் தட்டின் இருப்பிடத்தைக் காட்டினுன். அயல் தேசத்தவன் ஆவலுடன் அதை நெருங்கிக் கையில் எடுத்தான். அவன் கை பட்டதும் தங்கத் தட்டு மண் தட்டாக மாற வில்லை. எப்பொழுதும் போல் தங்கத் தட்டாகவே ஜொலித்தது.

"என்ன அதிசயம்! நாங்கள் அந்தத் தங்கத் தட்டைத் தொட்டதும் மண் தட்டாக மாறியது. ஆனுல் உங்கள் கையில் அது தங்கத் தட்டாகவே காட்சி யளிக்கிறதே?" என்ருன் மணிபுரி மன்னன்.

"மன்னர் மன்னனே! நாங்கள் உழைத்து மண்ணையும் பொன்னுக்குகிருேம். ஆனுல் உங்கள் தேசத்தில் மக்கள் உழைப்பை மறந்து பொன்னை மண்ணுக்குகிருர்கள். இந்த அற்புதத்தைத் தான் இந்த அதிசயத் தட்டு காட்டுகிறது" என்று அயல் தேசத்தவன் தங்கத் தட்டின் இரகசியத்தைத் தெளிவாக விளக்கினுன்.

விசித்திர வர்மனுக்கு இப்பொழுதுதான் தன் கடமையை மறந்து விட்டது அவன் மனத்தில் உறைத்தது. நாட்டில் உழைத்துப் பாடுபடும் மக்களை வீணுகப் பிரசங்கத்தைக் கேட்க வைத்துச் சோம்பேறியாக்கிவிட்டதை அவன் அப்பொழுது தான் உணர்ந்தான். தன்னுடைய மூடச் செய்கையை நினைத்து வெட்கி அவன் தலை குனிந்தான். பிறகு தன்னுடைய கடமையை உணர்த்திய அயல் தேசத்தவருக்கு நன்றி செலுத்தத் திரும்பினுன். ஆனுல் என்ன ஆச்சரியம்! அயல் தேசத்தவரை அங்கு காண வில்லை. அதிசய தங்கத் தட்டும் மாயமாய் மறைந்து விட்டது.

அன்றிலிருந்து அரசன் தன்னுடைய பிரசங்கத்தை நிறுத்தி விட்டு முறையாகச் செங்கோல் செலுத்துவதில் முனைந்தான். மக்கள் தங்கள் தொழில்களைச் செவ்வனே புரிய முற்பட்டனர். நாடு செழித்தது. மணிபுரி மக்கள் சீரும் சிறப்பும் பெற்று எவ்விதக் கவலையுமின்றிச் சந்தோஷமாக வாழ்ந்து வந்தனர்.

# அவனுடைய ஒவ்வொரு நிலைமையும் அறிவிப்பது—இது ஒரு கிளாக்ஸோ குழந்தை



தங்கள் குழந்தைகளுக்கு பூராவும் தங்கள் பாலையே கொடுக்கமுடியாத தாய்மார்கள் கிளாக்ஸோவில் நம்பிக்கை வைக்கலாம். சரிவர சமநிலையாக்கப்பட்டதும் மிகவும் பரிசுத்தமான பால் ஆகாரம் அதுதான். உஷ்ணப் பிரதேசங்களிலுள்ள குழந்தைகளுக்காக பிரத்யேகமாகத் தயாரிக்கப்பெற்றது. கிளாக்ஸோ காற்று உட்புகாத டின்களில் பாக் செய்யப்பட்டது. அதனால் அது எப்பொழுதும் முற்றிலும் நல்ல நிலைமையில் இருக்கிறது.




## Glaxo

### கிளாக்ஸோ பரிபூரண குழந்தை ஆகாரம்

குழந்தை பிறந்த ஆறாவது மாதத்திலிருந்து அதற்கு முதல் கெட்டி உணவாக பாரெக்ஸைக் கொடுக்க ஆரம்பிக்கலாம். பாலும் சர்க்கரையும் சேர்ந்த பாரெக்ஸ் திருப்தியாயிருப்பதுடன் சுலபமாக ஜீரணமாகிறது. பாரெக்ஸ் இப்பொழுது இந்தியாவில் விற்கப்படுகிறது.

கிளாக்ஸோ லேபரட்டரீஸ் (இந்தியா) லிமிட்., பம்பாய் - கல்கத்தா - மதராஸ்.



# சேகர், என் குழந்தை

'எஸ்.வி.எஸ்'

★ ★ ★

## நான்காம் பகுதி

நீங்கள், 'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்ற பழமொழியைக் கேட்டிருப்பீர்கள். ஏன்? 'பருப்பில்லாமல் ஒரு கல்யாணமா?' என்ற பழமொழியையும் கேள்விப்பட்டிருப்பீர்கள். இதனால் உப்பும், பருப்பும் எவ்வளவு முக்கியமான விஷயங்கள் என்று தெரிகிறதல்லவா! ஆயினும், ஒரு வீட்டில் கல்யாணம் வந்தால் சாமான் ஜாபிதா தயாரிக்கும் போது முதலில் உப்பும் பருப்பும் எழுதுவதில்லை. மஞ்சள் குங்குமம்தான் எழுதுவார்கள். அதற்குப் பிறகுதான் உப்பும் பருப்பும் இடம் பெறும்; அரிசியும் அஸ்காவும் ஆட்சி செலுத்தும்!

இப்பொழுதெல்லாம் யாராகிலும் வீட்டுக்கு வந்து விட்டால், அவர்களுக்கு மரியாதை செய்வதாக நினைத்துக் கொண்டு வேளை கெட்ட வேளையில் காப்பி போட்டுக் தருவது என்பது நம்மிடையே வழக்கமாகி விட்டது. நம் வீட்டைத் தேடி, நம் வாசற்படி ஏறி யாராகிலும் வந்து விட்டால் அவர்களுக்கு ஏதாகிலும், ஒரு கப் காப்பியாகிலும் கொடுத்தால்தான் நம் மனசும் நிம்மதி பெறுகிறது. சுமங்கலிப் பெண்களாக வந்து விட்டால், வெற்றிலை பாக்கு வைத்துத் தேங்காய்த் தாம்பூலம், அல்லது பழம் வைத்தாகிலும் தாம்பூலம் கொடுப்பது நம் மரபு. ஒவ்வொரு சமயம், வீடு தேடி வருபவர்கள், ஒரு நிமிஷம் இரண்டு நிமிஷத்துக்கு மேல் நிற்கக் கூடிய நிலைமையில் இல்லாமலிருப்பார்கள். நமக்கும், உடனே காப்பி சேர்த்துக் கொடுக்க முடியாமல், தேங்காய், பழம், தாம்பூலம் கொடுக்க முடியாமலிருக்கலாம். ஆயினும், வீட்டில் குங்குமச் சிமிழ் எப்பவும் இருக்கும். "இந்தாம்மா, குங்குமம் எடுத்துக்கொள்! இந்த மஞ்சள் குங்குமத்துடன் என்றென்றும் வாழ்வாயாக" என்று ஆசி கூறுவோம், அல்லது பிரார்த்தனை செய்வோம்—வந்தவர்களின் வயதுக்கு ஏற்ப.

இப்படிக் குங்குமம் நமது வாழ்க்கையில் மிகமிக உன்னத ஸ்தானத்தைப் பெற்றுள்ளது. நெற்றியில் செந்தூரம் அணிந்த பெண்களைப் பார்ப்பது உள்ளத்துக்கு ஒரு பவித்திர உணர்ச்சியூட்டி வந்திருக்கிறது. நெற்றியில் குங்குமம் அணியும் அருகதை பெற்ற ஒரு மங்கை, அதை அணியவில்லையென்றால் அவள் வீட்டில் ஏதோ உற்பாதம் நேர்ந்திருக்க வேண்டும் என்று நினைப்பது வழக்கம்.

ஆகவே, உள்ளே நுழைந்த கருணாவின் தமக்கை, கருணாவை நெருங்கிப் பார்த்த போது திடுக்கிட்டாள்.

"என்னடி கருணா! பாழும் நெற்றியோடு இருக்கிறாய்? சேகர் எப்படியிருக்கான்...?" என்று அலறிய வண்ணம் கேட்டாள்.

"ஒன்றுமில்லை அக்கா! சேகர் சௌக்கியமாகத்தான் இருக்கான். அவனைப் பற்றி ஒரு கவலையும் படாதே! உள்ளே வா, அக்கா!" என்றாள் கருணா.

"உன் பாழ் நெற்றியையும், என்னைப் பார்த்ததும் உன் முகம்போன போக்கையும் பார்த்தபோது நிஜமாகவே எனக்கு ரொம்பவும் கவலையாகப் போய் விட்டது. எண்ணத்தகாததெல்லாம் எண்ணி விட்டேன், போ!" என்றாள் கருணாவின் தமக்கை.

அக்காவுக்குப் பின்னால் வந்த டைரக்டர் சங்கரைப் பார்த்துத்தான், கருணாவின் முகம் அப்படியெல்லாம் மாறியது என்பது அந்த அக்காவுக்கு எப்படித் தெரியும்?

சுகுணு சங்கரைப் பார்த்தானே தவிர, 'வாருங்கள்' என்று ஒரு வார்த்தைகூட மூகயன் கூறவில்லே. அக்காவுடன் பேசிக் கொண்டே வீட்டுக்குள்ளே போனுன். சங்கரும் மௌனமாக அவர்களைப் பின் தொடர்ந்தார்.

படுக்கையில் படுத்திருந்த சேகர், சுகுணுவின் தமக்கையைப் பார்த்ததும் "அம்மா!" என்று அழைத்தான். "என் கண்ணே!" என்று ஓடிப் போய், சேகரைக் கட்டி அணைத்தாள் சுகுணுவின் அக்கா.

இவற்றையெல்லாம் கவனித்து வந்த சங்கருக்கு ஒன்றன்பின் ஒன்ருக ஆச்சரிய அதிர்ச்சிகள் ஏற்பட்டு வந்தன!

சேகரைக் கட்டி அணைத்த அக்கா, "கண்ணே சேகர்! உனக்குப் பலத்த அடிப் பட்டதாம்மா? ரொம்ப அழுதாயா அம்மா!" என்று கண்களில் கண்ணீர் பெருகக் கேட்டாள்.

"எனக்குப் பலத்த அடி ஒன்றும் படவில்லே, அம்மா! லேசாகத்தான் பட்டது அம்மா! ஆனுல் உருண்டு விழுந்த பிறகு கொஞ்ச நேரம் வரைக்கும் ஒன்றுமே தெரியவில்லே, அம்மா! ஒரே கருகும் என்று இருட்டடித்திருந்தது. அப்புறம் இந்த மாமாதான் அம்மா, டாக்டரை அழைச்சு வந்து......" என்று கையை நீட்டிச் சுட்டிக் காட்டி ஏதோ சொல்லலானுன். உடனே அவன் தாயார், அவன் சுட்டிக் காண்பித்த பக்கம் திரும்பினுள். அவள் பார்வை சங்கரின்மீது விழுந்தது. சங்கரைப் பார்த்ததும், அவள் புருவங்கள் நெரிந்தன. ஆம், 'இவரை எங்கேயோ பார்த்திருக்கிறுப் போலிருக்கிறதே! இவர் முக ஜாடை நமக்கு நன்கு தெரிந்தவர் ஒருவரை நினைவு ஊட்டுகிறதே! அவர் யார்?' என்ற யோசனையில் தான் அவளுடைய புருவங்கள் நெரிந்தன!

அதற்குள் சுகுணு, "அக்கா இவர்தான் நம்ம சேகருக்குப் புனர்ஜன்மம் கொடுத்தவர். இவர் இல்லேயென்ருல், நீ சேகரைப் பார்த்தே இருக்க முடியாது! இவர் பணத்தைப் பணம் என்று பாராமல் செலவழித்து வைத்தியம் பண்ணியதால் பிழைத்தெழுந்தான்..." என்ருன் அவசரம் அவசரமாக. சங்கரைப் பற்றியும் தன்னைப் பற்றியும் அக்கா தவருக நினைத்துக் கொள்ளாமலிருக்க வேண்டுமே என்ற பயத்திலும், அக்காவுக்குச் சங்கரைப்பற்றி நல்ல அபிப்பிராயம் விழ வேண்டும் என்ற கவலையிலும் சங்கரைப் பற்றி அவ்வளவு வானளாவப் புகழத் தொடங்கினுன்.

சங்கரைப் பற்றி அவன் கூறிய புகழ்ச்சி மொழிகள் அத்தனையும் வெறும் முகஸ்துதியாக இல்லாமல் உண்மையோடு கலந்திருந்ததால் அவன் எதிர்பார்த்த பலன் கிடைத்தது. "ஓஹோ! அவ்வளவு உபகாரம் பண்ணினுரா! எங்கேயோ அவர் சிரஞ்சீவியாக, க்ஷேமமாக இருக்கட்டும்" என்று ஆசீர்வதிக்க வந்தவள், "நீங்கள் பாங்கிப்

பேட்டை சத்தியமூர்த்தி அய்யருக்கு ஏதா விலும் உறவோ?'' என்று ஏதோ திடீர் என்று ஞாபகம் வந்தவள்போல் கேட்டாள்.

"அவருடைய சாட்சாத் பிள்ளைதான் நான்; என்னுடைய அப்பாதான் அவர்!'' என்று கூறினார் டைரக்டர் சங்கர்.

"அதனால்தான், அப்பா பேரையும் சேர்த்து, சத்திய சங்கர் என்று வைத்துக் கொண்டிருக்கிறீர்களோ?'' என்றாள் சுகுணா.

"அதுதானே கேட்டேன், எங்கேயோ பார்த்த முக ஜாடையாக இருக்கிறதே என்று இத்தனை நாழியாக யோசித்தேன்...'' என்றாள் சுகுணாவின் தமக்கை.

பிறகு சங்கரைப் பற்றியும், அவர்கள் குடும்ப விஷயத்தைப் பற்றியும் குசலம் விசாரித்தாள். சங்கர் ஏதோ பட்டும் படாதது மாகத் தன் குடும்பத்தைப் பற்றிய பொதுவான விவரங்களைக் கூறினார்.

இவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தவள் திடீர் என்று, "ஆமாம், சுகுணா! அத்தை, அத்திம்பேர் எங்கே காணோம்! வந்த நிமிஷத்திலிருந்து பார்க்கிறேன், பார்க்கிறேன், அவர்கள் கண்களில் தட்டுப்படவே இல்லையே!'' என்றாள் சுகுணாவின் தமக்கை.

"அவர்கள் இந்த வீட்டில் இருந்தால் அல்லவோ தட்டுப்படுவதற்கு? அக்கா! நான் துணிச்சலாக ஒரு காரியம் செய்தேன். அதற்கு என்னை மன்னிச்சுடு, அக்கா! துணிச்சலாகச் செய்தாலும், தவறாக ஒன்றும் செய்துவிடவில்லை; தவறாக நடந்து கொள்ளவு மில்லை...!'' என்று கூறினாள். அப்பொழுது அவள் நெஞ்சு தழுதழுத்தது.

"என்னடி புதிர் போடுகிறாய்? எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லு!'' என்றாள்.

"நான் ஊரிலிருந்து சேகருடன் புறப்பட்டபோது, அத்தை வீட்டில் இறங்கிக் கொண்டு, ஸ்கூல் டீச்சர் உத்தியோகம் தேடிக் கொண்டு உனக்கு ஏதாகிலும் என் கையாலான உபகாரம் செய்கிறேன் என்று சொன்னேன் அல்லவா! ஆனால் ரயிலில் வரும் போது ஒரு தினசரிப் பத்திரிகை பார்க்க நேர்ந்தது. அதில், சினிமாவில் நடிக்க நாலு வயது, அல்லது ஐந்து வயதுக் குழந்தை தேவை யென்றும், குழந்தையும் பெற்றோர்களுமாக ஸ்டுடியோவுக்கு வந்தால் பரிசீலனை செய்து தேர்ந்தெடுக்கப் படுவார்கள் என்றும் விளம்பரப் படுத்தப் பட்டிருந்தது. நம்ம சமர்த்துச் சேகரைச் சினிமாவில் சேர்த்தால், நிறையப் பணமும் புகழும் சம்பாதிப்பானே என்று தோன்றியது. ஆனால் அத்தை வீட்டில் இறங்கிக் கொண்டு, இந்தக் காரியத்தைச் செய்யத் துணிந்தால், கட்டாயம் அவர்கள் சம்மதிக்க மாட்டார்கள் என்று தோன்றியது. எனவே, எழும்பூர் ஸ்டேஷனில் ரயிலை விட்டு இறங்கியதும் நேரே ஸ்டுடியோவுக்குச் சென்று விட்டேன். எட்டு மணியிலிருந்து ஸ்டுடியோ வாசலில் காத்துக் கொண்டிருக்க நேரிட்டது. பதினோரு மணி வரை பொறுத்

தேன். அப்புறம் என்னால் பொறுக்க முடியவில்லை. டைரக்டரை நேரில் பேட்டி கண்டு 'சேகரைத் தேர்ந்தெடுக்கப் போகிறீர்களா, இல்லையா?' என்று நேர்முகமாகக் கேட்டு விடுவது என்று அங்கே காத்திருந்தவர்களிடையே குழப்பம் நேர்ந்தபோது, டைரக்டர் அறைக்குள் போய் விட்டேன். அங்கே இவரைக் கண்டதும் திக்பிரமை பிடித்து நின்றேன். ஏனெனில் ஊரிலிருந்த போதே, இவரை எனக்குத் தெரியும்! பல முறை ஆற்றங் கரையிலும், பிள்ளையார் கோவிலிலும், கடை கண்ணிகளிலும் பார்த்திருக்கிறேன். ஏன், இவர் வீட்டுக்கே போயிருக்கிறேன். ஆகவே, டைரக்டர் அறையில் இவரைப் பார்த்ததும் 'இவர் இங்கே எங்கே வந்து சேர்ந்தார்' என்று நினைத்தேன்!" என்று சங்கரைச் சுட்டிக் காட்டிக் கூறினாள் சுகுணா.

பிறகு நடந்தவற்றில் தன் அக்காவிடம் சொல்லக்கூடிய பகுதிகளை யெல்லாம் கூறி விட்டுக் கடைசியில், "அக்கா, சேகர் மாடிப் படிகளில் உருண்டு விழுந்ததும் எனக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. உனக்கு உடனே தெரிவிக்கக் கூடாது என்று மட்டும் தீர்மானித்தேன். ஐந்து ஆறு நாட்களுக்குப் பிறகு, சேகருக்கு ஏற்பட்டுள்ள காயங்களின் வடுக்கள் சில அவன் வாழ்நாள் முழுதும் இருக்கக் கூடியவை என்று தோன்றியதும் தான், உனக்கு விவரத்தை எழுதிக் கவலைப்பட வேண்டாம் என்றும் எழுதினேன்" என்றாள்.

"ஐயோ சுகுணா! உன் கடுதாசியைப் பார்த்ததும் எனக்கு இருப்பே கொள்ளவில்லை. எப்பொழுது பார்த்தாலும் சேகர் ஞாபகமாகவே போய்விட்டது. அதனால்தான் உடனே புறப்பட்டு வந்தேன். அது சரி, ஏண்டி சுகுணா! ஒரு கல்யாணமாக வேண்டிய பெண் இப்படி ஸ்டுடியோ வாசலிலும் அங்கேயும் இங்கேயும் தன்னந் தனியாகத் திரியலாமோ? என்ன துணிச்சலடி, உனக்கு, என்ன துணிச்சல்?" என்று அதிசயித்துக் கையைக் கொட்டி, முகவாய்க் கட்டையில் வைத்துக் கொண்டாள் சுகுணாவின் அக்கா.



கணவன் :—சுவரில் மாட்டி யிருக்கும் கடிகாரம் நேற்று கீழே விழுந்துவிட்டதே தெரியுமா உனக்கு? ஒரு வினாடிக்கு முன்னாலே அது கீழே விழுந்திருந்தால் அம்மாவின் தலையிலே விழுந்திருக்கும்!

மனைவி :—அந்தப் பாழாய்ப் போகிற கடிகாரம் எப்பொழுதும் மெதுவாய்த் தான் போகிறது!

இதுகாறும் டைரக்டர் சத்திய சங்கர் ஒரு பக்கமாக ஒதுங்கி நின்று தமக்கை—தங்கை சம்பாஷணைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார். கடைசியில் சுகுணாவின் தமக்கை சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும், 'என்ன! சுகுணா, கல்யாணமாக வேண்டிய பெண்ணா! இவளுக்கு இதுவரை கல்யாணம் ஆகவில்லையா! இத்தனை நாளும் என்னிடம் பொய் சொல்லியா ஏய்த்து வந்திருக்கிறாள்!' என்று பேராச்சரியத்தில் மூழ்கிவிட்டார் டைரக்டர் சத்தியசங்கர்.

"அக்கா! நான் கல்யாண மாகாதவள் என்று யாருக்கும் தெரியாது. இவருக்குக் கூடத் தெரியாது. அதற்கு மாறாக, கல்யாணமாகி......" என்று மென்று விழுங்கினாள் சுகுணா.

அவள் என்ன சொல்ல வருகிறாள் என்பதை ஊகித்துக் கொண்ட சுகுணாவின் தமக்கை, "ஏண்டி அசடே! கல்யாணமாகிக் கழுத்தை யறுத்தவள் என்று சொல்லிக் கொண்டாயாக்கும்! நல்ல சமர்த்துடீ! பெண்களுக்கு அரை குறைப் படிப்பும், அசட்டுத் துணிச்சலும் இருந்து விட்டால் இன்னதுதான் சொல்வது என்று பாராமல், வாய்க்கு வந்ததையெல்லாம் உளறி விடுவார்கள் என்று உன் அத்திம்பேர் அடிக்கடி சொல்லுவார். அது ரொம்ப உண்மையாகப் போச்சு! சுத்த அசட்டுப் பெண்ணடி நீ. சுத்த அசடு!" என்றாள்.

"ஆமாம், அக்கா! என் துணிச்சலைப் பற்றியும், என் படிப்பைப் பற்றியும் அளவு கடந்த கர்வம் கொண்டிருந்தேன். அந்தக் கர்வத்தில்தான் இம்மாதிரி யெல்லாம் உளறி, சென்ற ஆறுமாதமாக நான்பட்ட அவஸ்தை கொஞ்ச நஞ்சமல்ல, அக்கா! நான் நல்ல தண்டனை அனுபவித்து விட்டேன். இனி, நீ சொல்லுகிற வரனைக் குற்றம், கொனஷ்டை சொல்லாமல், கல்யாணம் செய்து கொண்டு, கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன் என்று இருந்து விடுகிறேன், அக்கா. பெண்ணாய்ப் பிறந்த ஜன்மத்துக்கு, இன்றைய லோகரீதியில், அம்மாதிரி யிருந்து விடுவது தான் உத்தமம் என்று கண்டு கொண்டேன், அக்கா! இத்தனை நாளாக நான் செய்த குற்றங்களை யெல்லாம் மன்னித்து விடு அக்கா! நீ சொல்கிறபடி நடக்கிறேன், அக்கா!" என்று கூறி அவள் காலில் விழுந்தாள் சுகுணா.

"எழுந்திரு, சுகுணா! கல்லாக இருக்கும் கணவனைக் கனியவைக்கும் சக்தியும், புல்லாக இருக்கும் புருஷனைப் புனிதனாக்கும் தன்மையும் பெண்களிடம் இருக்கும் போது, கவலைப் படுவானேன் சுகுணா! அதுவும் உன்னைப் போன்ற புத்திசாலிப் பெண்களால் ஆகாத காரியம் கூட இருக்க முடியுமா, சுகுணா?" என்றாள் சுகுணாவின் தமக்கை.

சற்று நேரத்துக்கு முன் 'அசடு, சுத்த அசடு' என்று கூறிய அதே வாய், இப்பொழுது 'உன்னைப் போன்ற புத்திசாலி கிடையாது' என்று புகழ்வதைக் கண்டு டைரக்டர் சத்திய சங்கர் அப்படியே வியப்புக் கடலில் ஆழ்ந்து போனார். மேலும், தமக்கை - தங்கைக்குள் எவ்வளவு அன்பும் அன்யோன்னியமும் இருந்தால் இப்படியெல்லாம் பேசச் செய்யும் என்று எண்ணினார்! இந்த எண்ணம் தோன்றியதோ இல்லையோ அடுத்த கணமே, சங்கர், இனி அங்கே தமக்கு இடமில்லை என்பதை யுணர்ந்தார். "சரி, நான் போய் வருகிறேன். ஸ்டுடியோவில் வேலையிருக்கிறது. சேகரை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி விட்டுக் காருக்குச் சென்றார்.

அவனையே பார்த்துக் கொண்டிருந்த அக்கா, "ஏண்டி, இந்தப் பிள்ளையாண்டானுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதோ? முன்னால் சத்தியமூர்த்தி ஐயர் பிள்ளை, யாரோ ஏழைப் பெண்ணைத் தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று சொன்னானும். அதில் அப்பாவுக்கும் பிள்ளைக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு பிள்ளை ஊரை விட்டே போய் விட்டான் என்றும் ஊரார் சொல்லிக் கொண்டது என் புக்ககத்திலிருந்த போது காதில் விழுந்தது?" என்றாள்.

"அவருக்கு இன்னும் கல்யாணமாகவில்லை, அக்கா! அவர் விரும்பிய ஏழைப் பெண், வேறு யாருமில்லை நான்தான், அக்கா!" என்று சொன்னாள். அப்பொழுது வெட்கம் அவள் முகத்தை இன்னும் அழகுறச்செய்தது!

"அப்படியா சமாசாரம், 'அடி, சக்கை' என்றாளாம். சரிதான், சரிதான்! இப்போது தான் எனக்கு எல்லா விஷயமும் புரிகிறது!" என்று சொல்லித் தங்கையை வாத்ஸல்யத்துடன் அணைத்துக் கொண்டாள். அத்துடன் நில்லாமல், பக்கத்தில் எங்கேயாகிலும் குங்குமச் சிமிழ் இருக்கிறதா என்று தேடினாள். காணாமற்போகவே, தன் நெற்றியிலிருந்த குங்குமத்தை யெடுத்து அவள் நெற்றியில் இட்டு, சுகுணாவின் அழகைப் பார்த்து மகிழ்ந்து, திருஷ்டி கழித்தாள்!

* * *

நீலக் கடலில் அலைகள் பொங்கிப் பொங்கி எழுந்து ஆஹ்லாதித்தன.

அதன் கரையில் உலாவிக்கொண்டிருந்த, தம்பதிகள் — சுகுணாவும் சங்கரும்தான் — அளவளாவிக் கொண்டிருந்தனர்.

சற்றுத் தூரத்தில் சேகர், அலைகளுடன் விளையாடிக்கொண்டிருந்தான். சின்னச் சின்ன அலைகள், அவன் சிறு பாதங்களை அலம்பி விட்டுப் போகும்போது, அவன் அடைந்த ஆனந்தமும் குதூகலமும் கொஞ்ச நஞ்சமல்ல! கும்மாளி போட்டுக் குதித்தான்!

டைரக்டர் சத்திய சங்கர், அவனையே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தார்.



"அந்தப் பயல் சுத்தப் போக்கிரியா இருக்கானே! தட்டில் இருக்கிற அசோகா வெல்லாம் நாம் தின்னு விடுவோம் என்று, நமக்கெல்லாம் குங்குமம் கொடுத்து அனுப்பப் பார்த்தான்."

"அப்படியும் நம்ப போகிறதாக் காணோம் என்று மறுபடியும் குங்குமச் சிமிழை எடுத்துவரப் போகிறான் போலிருக்கு...கிளம்புங்கோ, கிளம்புங்கோ.

சுகுணா தன்னைப் பற்றி நினைத்தாள். தன் வாழ்க்கை உருப்பெற்ற விதத்தை நினைத்தாள். அவளுக்குச் சிரிப்பு வந்தது. பிறகு, டைரக்டர் காதில் விழும்படியாக, "இந்தச் சேகரை சினிமாவில் சேர்த்து, அவன் திரையில் நடிக்கப் பார்க்கணும் என்ற நோக்கத்துடன் சென்னைக்கு வந்தேன் அது...அது..." என்று கூறி மேலே சொல்ல முடியாமல் தடுமாறினாள்.

சங்கர், "குடிக்கையான குழந்தையை நடிக்கச் செய்து பெயரும் புகழும் சம்பாதிக்க வேண்டும். அதுவே என் வாழ்க்கையின் லட்சியம் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் சேகரைப் பார்த்த பிறகு, சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் அவன் படும் ஆனந்தத்தைப் பார்த்த பிறகு, அவனுடன் கூட நாமும் குழந்தையாக மாறமாட்டோமா என்றுதான் என் மனசு ஏக்கமுற்றது. அர்த்தமற்ற அற்ப விஷயங்களுக்கெல்லாம் எவ்வளவு கவலைப்படுகிறோம்; கோபதாபப் படுகிறோம்! இவற்றையெல்லாம் ஒழித்துக் குழந்தையோடு குழந்தையாக வாழமாட்டோமா என்றுதான் எனக்குத் தோன்றியது. ஏன்? மனுஷனின் வாழ்க்கை லட்சியமே, இந்தக் குழந்தைத் தன்மையை எய்துவதே என்ற உண்மையைக் கண்டேன், சுகுணா! இதுவே இம்மையில் அடையக் கூடிய சுவர்க்க இன்பம் என்பதையும் கண்டேன்" என்றார் சத்திய சங்கர். (முற்றும்)

# அமைதி பிறந்தது



பா. தண்டபாணி

நான் என் வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு எங்கள் விடுதியின் மேல் மாடி முகப்பின் அருகில் பிரம்பு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன். வானம் துல்லியமாயிருந்தது. முழுமதி அவ்வானத்துக்கு அழகு செய்தது. நான் அந்த அழகில் என் மனத்தைப் பறிகொடுத்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தேன்.

நான் டாக்டர் ராமனிடம் அவரது நர்ஸிங் ஹோமில் நர்ஸ் உத்தியோகம் பார்த்து வந்தேன். நோயாளிகளைப் பார்த்து அவர்களுக்கு வேண்டியதை யெல்லாம் உடனுக்குடன் கவனித்துச் சேவை செய்வதில் எனக்கு இருந்த ஆர்வம் சொல்லி முடியாது. நோயாளிகளின் தீனக் கதறல் என் செவிகளில் சதா கேட்டுக் கொண்டிருக்கும். இளமையிலேயே கருகிப் போன என் வாழ்வு அந்தச் சேவை உணர்ச்சியில் ஓர் எல்லையற்ற இதத்தைக் கண்டது. முன்பு அமைதியற்றுத் தவித்த என் உள்ளம், இப்பொழுது எத்தகைய அமைதியை அடைந்திருந்தது! இந்த மாறுதலை நினைத்துப் பார்க்க எனக்கே ஆச்சரியமாயிருந்தது. வறண்டு கிடந்த என் வாழ்க்கையில் இத்தகைய அமைதியான நிலை கிட்டும் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. என் வாழ்க்கையில் இத்தகைய அமைதியையும் ஆனந்தத்தையும் ஏற்படுத்திக் கொடுத்த அந்த மனிதர்தான் எத்தகையவர்!

டாக்டர் ராமனைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் என் உள்ளத்தில் ஒரு நன்றியுணர்ச்சி பிறந்து எல்லை கடந்து பரவும்.

• • •

நான் சிறு வயதிலேயே தாயை இழந்தவன். ஊர் வேலூரில் என் தந்தை கணக்குப் பிள்ளையாக வேலை பார்த்தார். என்னைச் சிரமப்பட்டுப் பத்தாம் வகுப்பு வரையில் படிக்க வைத்தார். சாதாரண குடும்பத்தில் பிறந்த எனக்கு மதுரையில் புகழ் பெற்ற ஓவியர் ஒருவருக்கு மனைவியாக வாய்க்கும் அதிர்ஷ்டம் ஏற்பட்டது. திருமணம் செய்து இரண்டு மாதம் கழித்து என் தந்தை இறந்து விட்டார். தந்தையைப் பிரிந்த எனக்கு ஆறுதலும், ஆதரவும் தரக் கணவரைத் தவிர யாருமில்லை.

ஓவியர் நிலையும் என் நிலைதான். ஓவியத்தில் தான் அவருக்குப் புகழ்; செல்வத்திலல்ல. அவர் [illegible] செய்யும் தொழில்தான் மூலதனம். காலை முதல் மாலை வரை வரைந்த ஓவியங்களை எடுத்துக் கொண்டு கடை வீதிக்குச் சென்று விற்று வருவார். விற்று வந்த பணந்தான் குடும்பச் செலவுக்கு உதவும். ஒருவர் சம்பாதித்துக் குடும்பம் நடத்துவது

கஷ்டமாக இருந்தது. ஆகவே சிறு பிள்ளைகளுக்கு டியூஷன் சொல்லிக் குடும்பச் செலவைப் பார்த்துக் கொள்ளலாம் என்று ஒரு நாள் அவரிடம் சொன்னேன். அதற்கு அவர் இசையவில்லை. வெளியில் செல்லவும் உரிமை தரவில்லை. நான் படித்த படிப்பு வீணாகி விட்டதே என்று நைந்து நொந்து போனேன். வாழ்க்கைப் படகு ஒருவாறு ஓடியது.

இரவும், பகலும் கண் விழித்துப் படங்களை எழுதுவார். ஓய்வு எடுத்துக் கொள்ள மாட்டார். இப்படியே ஆறு மாதங்கள் தேய்ந்தன.

அவர் உடல் குன்றி வர ஆரம்பித்தது. திடீரென்று ஒரு நாள் மாரடைப்பினால் இறந்தார். எனக்கு உறவினர்கள் இருந்தும் பாலைவனத்தில் காயும் நிலவு போன்றிருந்தார்கள். விதவைக் கோலம் பூண்டு தனி வாழ்க்கையை ஆரம்பித்தேன். ஆனால் அவ்வாழ்வு எனக்குப் பயங்கரமாக இருந்தது. என் சிநேகிதி ஒருத்தி சென்னையில் வாழ்வது தெரியும். அவர் இறந்த சமயம் அவளும் மதுரைக்குக் கணவனுடன் வந்தாள். அவர்களிருவரும் என்னைச் சென்னைக்கு வந்து விடும்படி தொந்தரவு செய்தார்கள். நான் இரண்டு மாதம் கழித்து வருவதாகச் சொல்லி அனுப்பினேன். சிநேகிதியின் அழைப்பை ஏற்றுக் கொள்ளுவதா வேண்டாமா என்று ரொம்ப தூரம் யோசித்துப் பார்த்தேன். என் அப்பொழுதைய நிலையில் அவர்களிடம் செல்லுவதுதான் சௌகரியமென்று எனக்குத் தோன்றியது.

கடைசியில் அவர்களுடன் வாழ்ந்தால் இந்தப் பிரிவுத் துன்பம் தோன்றாது என எண்ணிச் சென்னை சென்று அவர்களை அடைந்தேன்.

என் சிநேகிதி கமலாவின் கணவர் ராயபுரம் கார்ப்பரேஷன் பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்தார். அவர்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன். அவர்களுடைய இணையற்ற அன்பில் என் துன்ப வாழ்வை ஓரளவு மறந்தேன். மனம் அமைதியாக இருந்தது. மூன்று மாதங்கள் ஓடின.

ஒரு நாள் மாலை எல்லோருமாக வெளியே போனோம். தூற்றல் வந்து விட்டது. நனைந்துகொண்டே வீட்டுக்கு வரும்படியாயிற்று. மறு நாள் காலை ஜுரம் வந்தது. அதைப் பொருட்படுத்தாது வீட்டு வேலைகளைக் கவனித்தேன். இரண்டு நாளைக்குள் ஜுரம் முற்றி டைபாய்டாக மாறியது.

அப்பொழுதுதான் டாக்டர் ராமனிடம் கமலா என்னை அழைத்துச் சென்று காண்பித்தாள். அவர் கூறியபடி அவர் ஆஸ்பத்திரியிலேயே தங்கி இருந்தேன். அவர் என்னை அடிக்கடி கவனித்துக் கொண்டு வந்தார். ஆறுதலும் கூறி வந்தார். அவருக்கு வயது ஐம்பது இருக்கும். ஆனால் தோற்றத்திலிருந்து வயதை நிர்ணயிக்க முடியாது. கருணையே உருவானவர். நோயாளிகளை ஏழை, பணக்காரர் என்ற வித்தியாசம்

பாராட்டாமல் அன்போடும் அக்கறையோடும் கவனிப்பார். ஒரு நாள் கூட அவர்களிடம் அலுத்துக் கொண்டதே கிடையாது.

டாக்டர் என்னிடம் அன்பாகப் பழகினார்; உரிமையோடும் பழகத் தொடங்கி விட்டார். சில நாட்களில் நான் பூரண குணமடைந்தேன். ஓய்விற்காக அங்கேயே ஒரு வாரம் தங்கி இருந்தேன்.

* * *

ஒரு நாள் காலை. டாக்டர், ஆஸ்பத்திரிக்கு வந்த நோயாளிகள் அனைவரையும் பார்த்து அனுப்பி விட்டு என் அறைக்கு வந்தார்.

"வறண்டு போன உன் வாழ்வை நினைத்து நீ அநாவசியமாக உன் மனசைப் புண்படுத்திக் கொள்கிறாய். நீ மட்டும் விரும்பினால் உன் வாழ்வில் நீ அமைதியைக் காணலாம். அது அப்படியொன்றும் சிரமமான காரியம் இல்லை. மனம் வைத்தால் மார்க்கம் உண்டு. நீ என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டார் டாக்டர் ராமன்.

எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. நான் திகைப்புடன், "டாக்டர் ஸார், நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? வறண்டு போன என் வாழ்வில் இனிமேல் அமைதி கிட்டுவதேது?" என்றேன்.

"அம்மா, லலிதா! வாழ்க்கையில் எப்பொழுதோ ஏற்பட்டு விட்ட துன்பத்தை நினைத்துச் சதா வருந்தி உழலுவதில் பயன் ஒன்றுமில்லை. உன் வாழ்க்கையில் உனக்குக் கிட்டியிருக்க வேண்டிய அமைதி அதனால் ஒரு போதும் கிட்டாது. நான் சொல்லுகிறபடி கேட்டு நடப்பதாயிருந்தால் உன் மனச்சோர்வு நீங்கிவிடும். தீனர்களுக்கும் நோயுற்றவர்களுக்கும் சேவை செய்வதில் தான் உனக்குப் பூரணமான அமைதி கிட்டும். நீ நர்ஸாகப் பயிற்சி பெற்று ஆஸ்பத்திரியில் சேவை செய்ய விரும்புகிறாயா?" என்று டாக்டர் ஒரு தந்தையின் களங்கமற்ற வாஞ்சையுடன் கேட்டார்.

என் கண்களில் ஏனோ நீர் ததும்பியது.

"டாக்டர், என் மிகுதியுள்ள வாழ்நாளை அவ்வளவு உயர்ந்த சேவையில் செலவிட நான் பாக்கியம் செய்திருக்கிறேனா?" என்று கேட்டேன்.

"லலிதா, உனக்கு அந்தத் துறையில் விருப்பம் இருக்குமானால், நானே உன்னை அதற்கு வேண்டிய பயிற்சிக்கு அனுப்பி வைத்து என்னுடைய நர்ஸிங் ஹோமில் வேலையும் தருகிறேன்" என்றார் டாக்டர்.

என்னால் அவருக்கு வாய்திறந்து ஒரு வார்த்தைகூடப் பதில் சொல்ல முடியவில்லை. இரு கரங்களையும் கூப்பி என் நன்றி உணர்ச்சியைத் தெரிவித்தேன்.

"கமலாவும் அவள் கணவரும் உன்னைப் பற்றிய விவரங்களையெல்லாம் தெரிவித்தார்கள். நீ ஒன்றுக்கும் வருந்த வேண்டாம். நம் சமூகம் அடியோடு கருகிப் போய்விடவில்லை. அதில் அமைதியுடன் வாழ வழி இருக்கிறது!" என்று டாக்டர் கூறினார்.

ஏதோ ஒரு மூலையில் ஏக்கத்தோடும் வேதனையோடும் வாழ்ந்திருந்தவள் இப்பொழுது மற்றொரு மூலையில் தங்கி அன்பையும், அருளையும், கருணையையும் கண்ணால் காண்கிறேன். டாக்டருடைய மேலான ஆதரவில் நர்ஸாகப் பயிற்சி பெற்று விட்டேன்.

வெகு நாட்களுக்கு முன்பு வாழ்ந்த அந்தப் பழைய மூலையை நோக்குகிறேன்; இப்பொழுது ஏற்பட்டிருக்கின்ற புதிய மூலையின் நிலையையும் ஆராய்கிறேன்.

பழைய மூலையின் வாழ்வில் அமைதி கிடையாது. சதா வேதனையும் வெறுப்பும்தான் இருந்தன; கண்ணீரும் கஷ்டமும்தான் இருந்தன. புதிய வாழ்வில் அன்புக்கும் ஆதரவுக்கும் இடம் இருந்தது. பண்படும் முறையும் தெரிந்தது: எல்லாவற்றுக்கும் மேலாகச் சேவை உணர்ச்சி அளித்த இதம் இருந்தது.

டாண், டாண் என்று மணி ஒலிக்கிறது. நான் வார்டுக்குப் போகவேண்டும். ஆகா! அமைதியற்ற என் மனசுக்கு அந்தச் சேவை உணர்ச்சிதான் அமைதியை அளித்தது.



இன்ஸ்பெக்டர் (சீட்டாடும் கூட்டத்தை வளைத்துக் கொண்டு ஒருவரைப் பார்த்து):—நீங்கள் சட்ட விரோதமாகப் பணம் வைத்துச் சீட்டாடுகிறீர்கள்!

அவர்:- இல்லை, இல்லை. நான் வேடிக்கை பார்க்க இங்கே வந்தேன்!

இன்ஸ்பெக்டர்:— (இன்னொருவரைப் பார்த்து)!—நீங்கள் சட்ட விரோதமான சீட்டாட்டம் விளையாடுகிறீர்களா?

இரண்டாமவர்:— கிடையவே கிடையாது. நான் சும்மா நண்பர்களுடன் அரட்டை யடிக்க வந்தேன்.

இன்ஸ்பெக்டர் (மூன்றாவது ஆசாமியைப் பார்த்து):—நீங்கள் சீட்டாடத் தானே வந்தீர்கள்?

மூன்றாமவர்:—இல்லவே இல்லை. என் நண்பரை இங்கே பார்க்கலாம் என்று வந்தேன்.

இன்ஸ்பெக்டர் (நான்காவது ஆசாமியைப் பிடித்துக் கொண்டு):—நீங்கள் சட்ட விரோதமாகச் சீட்டாட வந்தீர்கள், இல்லையா?

நான்காமவர் (ஆச்சரியத்துடன்):—நானா? இங்கே என்னுடன் சீட்டாட யார் இருக்கிறார்கள்?




இதுவும் ஒரு உத்தியோகமா என்ற வெறுப்போடு, அலுப்பும் ஆத்திரமும் தீர, பலம் கொண்ட மட்டும் சேமக் கலத்தில் நான்கு முறை அடித்தான் ஜெயில் பாராக்காரன். விழித்துக் கொண்டுதான் இருந்தான் என்றாலும், பீர்பகதூர்சிங் கூர்க்காவை இந்தச் சப்தம் தூக்கி வாரிப் போட்டது. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தவாறே, தன் பார்வைக்கு இலக்கான புற உலகின் ஒரு பகுதியைப் பார்த்தான். எங்கும் பாலபிஷேகம் செய்தது போல நிலவு காய்ந்து கொண்டிருந்தது. இதைக் கண்டு ஏமாந்து போய் அசட்டுக் காகம் ஒன்று கரைந்தது. சூளை, காளவாய் இவற்றிலிருந்து புகை கிளம்பிச் சூழ்ந்த மாதிரி வெளியே ஒரே பனி மூட்டமாயிருந்தது. பாராக் காரன் சுவர் ஓரமாகக் குளிருக்காக ஒண்டிக் கொண்டிருந்தான். ஆனால் கூர்க்காவுக்குக் குளிரே தெரியவில்லை. இரும்புக் கம்பிகள் அகஸ்மாத்தாகத் தன் மேல் பட்டு விட்டால் கூட யாரும் துள்ளி விழும் காலம் அது. ஆனால் அவன் லக்ஷியமே செய்யாமல் கம்பிகளை இறுகப் பற்றிக் கொண்டிருந்ததோடு அவற்றை ஒட்டி உராய்ந்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். கூர்க்காவுக்கு இது ஒரு குளிரா, என்ன?

அவன் விடுதலையாக இன்னும் இரண்டே இரண்டு மணிதான் பாக்கி. அந்த இரண்டு மணி நேரமும் எப்படி ஓடும் என்று கவலையாயிருந்தது அவனுக்கு. வாஸ்தவமாகவே ஒரு நிமிஷம் ஒரு யுகமாகத்தான் அவனுக்குத் தோன்றியது அப்பொழுது.

அவன் மனம் சிந்தனை செய்ய ஆரம்பித்தது. "நாளைக் காலையிலிருந்து நான் சுதந்திர புருஷன். இப்பொழுது போலக் கூண்டுக் கிளி அல்ல. இன்று இப்படிக் கூண்டுக் கிளியாயிருக்கத்தான் நான் என்ன குற்றம் செய்து விட்டேன்? என் கடமையைச் செய்ததற்கு எனக்கு இந்த அன்பளிப்புத்தானா கிடைக்க வேண்டும்? சே, இனி இங்கே ஒரு கணம் கூடத் தங்கக் கூடாது. தாய் நாடு போக வேண்டும். போயே ஆகவேண்டும். போய் ஜலமதியை ஒரு முறையாவது ஆசை தீரப் பார்க்க வேண்டும்" என்று தன் மனத்துள் சொல்லிக் கொண்டான்.

ஜலமதியை அவன் எண்ணியதுதான் தாமதம், அவன் மனத்தில் பழைய சம்பவங்கள் அத்தனையும் நினைவுக்கு வந்து பளிச்சிட்டன!

* * *

இமய மலைச் சாரலில் இருக்கும் நேபாள நாட்டில் டபாகம் என்றொரு சின்னஞ்சிறு கிராமம். டோடி டெனில்துரா என்ற நகரத்தின் அருகில் உள்ள அந்தக் கிராமத்தில் பிறந்தவன்தான் பீர்பகதூர்சிங் கூர்க்கா. ஒரு ஏழை விவசாயியின் குடும்பத்தில்தான் பிறந்தான் என்றாலும் அவன் தந்தை தனபகதூர் சிங்கும், தாய் சர்பதா தேவியும் அவனை ஒரு குறையுமில்லாமல் வளர்த்து வந்தார்கள். அவர்களுக்கு அவன் ஒரே பிள்ளைதான். அப்படியிருக்க அவன் பேரில் அவர்கள் உயிரையே வைத்திருந்ததில் ஆச்சரியமென்ன?

பீர்பகதூர் கெட்டிக்காரன். வாட்டசாட்டமாக இருப்பான். தலையில் சுருள் சுருளாகக் கிராப்பு. அவற்றின் இடையே சின்ன முடிச்சோடு கூடிய உச்சிக் குடுமியும் உண்டு. செக்கச் செவேல் என்ற மேனி. விழிகளிலே ஒரு தனிப் பிரகாசம். உருட்டி விழித்தானானால் எவனுமே அரளுவான். செம்மறியாட்டின் கொம்பைப் போல, கருகருவென்றிருக்கும் அடர்ந்த மீசையை முறுக்கி விட்டிருப்பான். ஊரிலேயே அவனுக்கு அலாதி கௌரவம் உண்டு. அவன் வருகிறானென்றால் இளம் பெண்கள் ஜன்னல் வழியாகப் பார்த்து அவன் அழகை ரஸிக்கத் தவற மாட்டார்கள்!



ஹோட்டல் மானேஜர் (புதிதாகத் தங்கி யிருக்க வந்தவரைப் பார்த்து) :—என்ன சார், நீங்கள் காலையில் எழுந்து விடுவீர்களா? இல்லை, வேலைக்காரன் வந்து எழுப்ப வேண்டுமா?

வந்தவர் :—வேண்டாம், வேண்டாம்! நான் காலையில் சரியாக ஆறு மணிக்கு எழுந்து விடுவேன்.

ஹோட்டல் மானேஜர் :—அப்படியானால், தயவு செய்து நீங்கள் வேலைக்காரனைக் கொஞ்சம் எழுப்பி விடுகிறீர்களா?

என்றாலும் அவன் இதய பீடத்தில் ஜலமதி ஒருத்திக்குத்தான் இடம் கிடைத்தது. அவன் அந்த ஊர் காட்டாண்மைக்காரன் பாங்தேவின் மகள். சௌந்தரியம் எப்படி அவளிடம் குடிபுகுந்திருந்ததோ, அதே போல ஐசுவரியமும் அவர்கள் குடும்பத்தில் அடைக்கலம் புகுந்திருந்தது. தனக்கும் பீர்பகதூருக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது என்பது நன்றாகத் தெரிந்திருந்தும் ஜலமதியால் அவனைக் காதலிக்காமல் இருக்க முடியவில்லை.

நாளைக்கு ஒரு தரமாவது ஜலமதியைச் சந்திக்கா விட்டால் பீர்பகதூருக்குத் தூக்கம் வராது. ஜலமதிக்கும் அப்படித்தான்.

என்றுமில்லாத திருநாளாக அன்று ஜலமதி அவனிடம் கலங்கின கண்களோடு வந்தாள். அந்த மாதிரி நிலையில் அவளை அவன் அதுவரை பார்த்ததே யில்லை. அவனுக்குப் பொறி கலங்கி விட்டது. "என்ன, ஜலமதி? ஏன் என்னமோ போல இருக்கிறாய்? என்ன நடந்து விட்டது அப்படி?" என்று கேட்டான் பதட்டத்தோடு.

ஜலமதி பேசவில்லை. உலர்ந்து விட்ட தொண்டையை ஈரமாக்க எச்சிலை 'மடக்' என்று விழுங்கினாள். கண்களின் ஓரத்திலே நீர்த்துளிகள் முத்தார்த்தன!

பிறகு, மெதுவாகச் சமாளித்துக் கொண்டு, தனக்குப் பிரபல லேவாதேவிக்காரன் ராம் சிங்கைக் கொடுப்பதாகத் தீர்மானமாகி யிருக்கிறதென்றும் நாளை நிச்சயதார்த்தம் வைத்திருக்கிறதென்றும், ஒரு மாதத்தில் கல்யாணம் நடந்து விடுமென்றும், தன் தந்தையிடம் அவன் பெண் கேட்டபோது நிறையப் பரிசம் போடுவதாகச் சொல்லி யிருப்பதாயும், அதில் மயங்கியே தந்தை இதற்கு ஒப்புக் கொண்டிருப்பதாயும் அழாக் குறையாகச் சொன்னாள். பீருக்கு இதைக் கேட்டதும் தன் இதயத்தில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருந்தது.

அவன் என்ன செய்யலாம் என்று யோசித்தான். ஜலமதியோடு எங்காவது ஓடிவிடலாமா? அப்படிச் செய்தால் தங்கள் இருவர் ஆசையும் வேண்டுமானால் நிறைவேறலாம். ஆனால் இரண்டு குடும்பங்களுக்கும் நீங்காத அவப் பெயர் அல்லவா ஏற்படும்? அதற்கு இடங்கொடுக்கலாமா? என்ன பண்ணலாம்?

அவன் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டான். தான் எங்காவது ஓடி வேலை செய்து பிழைப்பது என்று தீர்மானித்தான். இதற்கேற்றாற் போல அவன் சிநேகிதன் ஒருவன், தென்னாட்டில் பாங்க் ஒன்றில் வாட்ச்மேன் வேலை பார்ப்பதாயும், அவனுக்கும் தன்னால் வேலைசெய்து வைக்க முடியுமென்றும் கடிதம் எழுதியிருந்தான். இதைப் பார்த்ததும் பீர் தாய் தந்தைக்கு ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டுத் தென்னாட்டை நோக்கிப் புறப்பட்டான். ஜலமதிக்கும் ஒரு கடிதம் எழுதித் தபாலில் போட்டான்.

தென்னாட்டுக்கு வந்ததும் நண்பன் அவனை உடனே சந்திரசேகரா கோவாபரேடிவ் ஸ்டோர்ஸில் 'வாட்ச்மேன்'ஆகச் சேர்த்து விட்டான். மாதம் எழுபத்தைந்து ரூபாய் சம்பளம். அவனுக்குக் கொள்ளை திருப்தி. தன் கடமையைச் சரிவரச் செய்து வரலானான்.

அவன் வேலைத்திட்டம் இதுதான். மாலை ஆறுமணியிலிருந்து மறுநாள் காலை ஆறு மணி வரை ஸ்டோரில் தூங்காமல் பாரா கொடுக்க வேண்டும். பதினைந்து நிமிஷத்துக்கு ஒருதரம் கடிகாரத்தின் செயினை இழுக்க வேண்டும். அவன் அப்படிச் செய்ய ஒருமுறை தவறி விட்டால் கூடப்போதும், கடிகாரம் அவனைத் தூங்கிவிட்டான் என்று காட்டிக் கொடுத்துவிடும். ஆனால் பீருக்கு இந்தக் கவலையேயில்லை. அவன்தான் என்றுமே கடமையில் தவறக் கூடியவனல்லவே!

இது தவிர ஸ்டோரிலிருந்து கோவாபரேடிவ் ஸெண்ட்ரல் பாங்குக்கு வாரம் ஒரு முறை பணம் கட்டப் போகும்போது, குமாஸ்தாவுக்குத் துணையாக அவன் போக வேண்டும். இவ்வளவுதான் அவனது வேலை!

ரிஸர்வ் போலீஸ் மாதிரி பூஷிபாரம். பித்தளைப் பட்டை மடித்த தோல் உறைக்குள்ளே செருகிய பட்டாக்கத்தி இடுப்பிலே. இத்யாதிகளோடு டபக் டபக் என்று பூட்ஸ் சப்தம் எழும்ப அவன் ஸ்டோரில் குறுக்கும் நெடுக்கும் நடப்பதைக் கண்டால் வீதியில் போவோர் வருவோருக்குக் கூடக் குலை நடுக்கம் எடுக்கும். ஒரு அணுவைகூட ஸ்டோர் திண்ணையிலே ஒண்ட நடுங்குவான்.

வந்து மூன்று மாதம்கூட இருக்காது. "நான் சொல்றேன் ...... ரொம்ப கஷ்டப் படறேன்......நம்ம 'டூடி'லே 'மிஸ்டேக்' இல்லாமல் இருந்திட்டாப் போச்சு!" என்று தமிழ் பேசவும் கற்றுக் கொண்டு விட்

டான். எதிர் வீட்டில் இருக்கும் நர்ஸ் அவனை ஒரு தினுசாகப் பார்க்கத் தொடங்கினாள். அவனது இளமையின் கவர்ச்சி அவளை ஆகர்ஷித்து விட்டது. அவளும் யுவதி. பீருக்கும் அவள் பேரில் ஒரு கண் தான்.

நர்ஸ் ஒரு நாள் அவனைச் சமிக்ஞை காட்டி அழைத்தாள். அவன் போனான். இருந்தாலும் உள்ளூறக் கொஞ்சம் நடுக்கம்தான். ஆனால் ஆசை என்று ஒன்று இருக்கிறதே, அந்தச் சபலம் அடங்கித் தொலைகிறதா? அவள் அவனைக் காதலிப்பதாயும், கல்யாணம் பண்ணிக் கொள்ள விரும்புவதாயும் சொன்னாள். கல்யாணம் என்றதுதான் தாமதம் 'சொரேல்' என்றது பீருக்கு. தொடர்ந்து ஜலமதியின் நினைவு வந்தது, ஆனால் அடுத்த க்ஷணமே மனதில் ஒரு விரக்தி யுணர்ச்சியும் ஒரு நிராசை பாவமும் வந்து விட்டது. என்ன இருந்தாலும் இனிமேல் ஜலமதி தன் சொத்து அல்லவே! அயலான்தானே? பணக்கார ராம்சிங்கின் பட்டமஹிஷி யல்லவா அவள்!

காலப் போக்கில் நர்ஸும் அவனும் இணை பிரியாதவர்களாகி விட்டார்கள். கள்ளம் கபடமற்றவன் பீர். ஒளிவு மறைவு என்பதே அவன் அகராதியில் கிடையாது. தனக்குத் தீங்கு செய்வோரைக் கொல்லவும் தயங்க மாட்டான் அவன். நேர்மை, நியாயம், பொறுப்புணர்ச்சி இவற்றை அவனிடமிருந்துதான் மற்றோர் கற்க வேண்டும்.

* * *

அன்றொரு நாள். பத்தாயிரம் ரூபாய் பணம் எடுத்துக் கொண்டு குமாஸ்தாவும் அவனும் பாங்கிக்குப் போய்க் கொண்டிருந்தனர். சந்தின் திருப்பம் வந்ததும் பீர் எதிரே நர்ஸைக் கண்டான். நர்ஸ் தெருவில் இங்கு மங்கும் பார்த்தாள். ஜனக் கூட்டமே யில்லை. உடனே சூர்க்காவின் கையைப் பற்றினாள். அடுத்த கணம் "ஐயோ! பாருங்கள், இந்த அக்கிரமத்தை! இந்த முரடனிடமிருந்து என்னைக் காப்பாற்றுங்கள்!" என்று அலறினாள். இந்தச் சமயம் எங்கிருந்தோ ஓடி வந்த இருவர் கிளார்க்கின் கையிலிருந்த பணம் நிரம்பிய தோல் பையைப் பிடுங்கினார்கள். இதற்குள் ஏகக் கூட்டம் கூடி விட்டது.

பீர் சிம்மம்போலத் திரும்பிப் பார்த்தான். முகம் கண்கள் இவை ரத்தமாகச் சிவந்தன. மீசை துடித்தது இனியும் தாமதிக்க நேரமில்லை அவனுக்கு. கையை உதறி விட்டு ஓடி, பணப் பையைப் பிடுங்கிக் கொண்டிருந்த இருவர் முதுகிலும் மாறி மாறிக் குத்து விட்டான். பையைக் கைப்பற்றினான். காலாலும் கையாலும் ராக்ஷஸன்போலத் துவைத்தான். அவன் கோபம் அடங்கின பாடில்லை. பொய் அழுகை அழுதவாறு அலங்கோலமாக நின்று கொண்டிருந்த நர்ஸிடம் திரும்பி வந்தான். அவளைக் காணக் காண அவனுக்குக் கோபம் பொங்கிற்று. பட்டாக் கத்தியை உருவி எடுத்து அவள் மீது செருக ஓங்கினான். நல்ல வேளை! அவள் கொஞ்சம் ஒதுங்கிப் போய்விட்டதால் உயிருக்கு அபாய மில்லாமல் இலேசான காயங்களோடு தப்ப முடிந்தது.

இதற்குள் போலீஸ் வந்துவிட்டது. எல்லோரையும் இழுத்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனார்கள்.

சூர்க்காவுக்கு ஒரு வருஷ சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. ஸ்டோர் அவனுக்காக ஒழுங்காக வாதாடி உதவி செய்யவில்லை. நீதிபதி, எப்படி யிருப்பினும் அவன் கருணையின்றி ஒரு பெண்ணை இம்சித்தான் என்பதற்காக அவனைத் தண்டித்தார். தெய்வமே என்று நினைத்துக் கொண்டு விதியை நொந்தவாறு தண்டனையை ஏற்றான் பீர்பகதூர் சிங்.

* * *

பாராக்காரன் அஸ்வாரஸ்யமாக விட்டு விட்டு மணி ஐந்தடித்தான்.

ஜலமதியைப் பற்றிக் கற்பனை செய்து பார்த்தான் பீர். இன்னும் ஒரு மணியைத் தள்ளியாக வேண்டுமே என்ற சலிப்பு அவனுக்கு. அந்தக் கடுங்குளிர் காலத்திலும் துக்கம் பொறுக்க முடியாமல் அவன் நெஞ்சு காய்ந்து போயிற்று.

அடுத்தாற்போல் பெற்றோர் நினைவுக்கு வந்தனர். அவர்கள் எப்படித் துடியாய்த் துடித்திருப்பார்கள்? இதை நினைக்கவும் அவன் குழந்தை போலத் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்து விட்டான்.

மணி ஆறு. அவன் விடுதலை பெற்று வெளியேறினான். பத்தடி நடப்பதற்குள்ளாக எதிரே கண்ட காட்சி அவனை ஒரு உலுக்கு



"நேற்று என் நண்பன் ஒருவனைப் பார்த்தேன். உங்கள் முக ஜாடை எனக்கு இருக்கிறது என்று சொன்னான்!"

"அப்படியா? யார் அவன்? என்னை அவமானப்படுத்திய அந்த ஆசாமியை நான் சும்மா விடப் போவதில்லை!"

"நீங்கள் பதட்டப்பட வேண்டாம். என்னை அவமானப் படுத்தியதற்கு நானே அவனுக்குத் தகுந்த தண்டனை கொடுத்து விட்டேன்!"

உறங்கி விட்டது. ஜலமதி, அவன் தந்தை பாக்தேவ்! அவனால் தன் கண்களை நம்பவே முடியவில்லை. கண்களைக் கசக்கிக் கொண்டு உன்மத்தம் பிடித்தாற்போல உன்னிப்பாகப் பார்த்தவன், அடுத்த வினாடி "ஹா, ஜலமதி!" என்று இடி முழக்கம் போலக் கூவிக் கொண்டே அவளை அப்படியே கட்டிக் கொண்டு விட்டான். பீர் பேச நா எழாமல் தேம்பிக் கொண்டிருந்தான். இந்தக் காட்சியைக் கண்ணால் கண்ட முரடன் பாக்தேவின் விழிக்கோணங்களிலும் கண்ணீர் துளும்பி விட்டது. 'என்னை மன்னிப்பாயா?' என்று கெஞ்சுவது போலிருந்தது அவன் பார்வை!

பாக்தேவ் ரயிலில் போகும்பொழுது எல்லா விவரங்களையும் சாங்கோபாங்கமாகச் சொன்னான். பீருக்குக் கேட்கக் கேட்க ஒரே ஆச்சரியமாக இருந்தது. ராம்சிங் கல்யாணம் வைத்திருந்த தேதிக்கு முதல்நாளே திடீரென இறந்துவிட்டதால் கல்யாணம் நின்றுவிட்டதாயும் அதை மனத்தில் வைத்துப் பார்த்தபோது ஜலமதியின் காதலில் ஏதோ ஒருவித தெய்விக சக்தி இருப்பதாகத் தோன்றியதாயும், அதன் காரணமாக, வரவேண்டிய இடத்திலிருந்து பணம் வந்ததும் பீர்பகதூரை நேரில் வந்து அழைத்துப் போகலாமென்று இருந்ததாயும் பாக்தேவ் சொன்னான். இதைக் கேட்டதும் பீர் ஜலமதியை மீசை நெளியப் புன்முறுவலோடு பார்த்தான். ஜலமதி பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு இளம் குஜராத்தி தம்பதிகளைக் கண்ணால் காட்டி முறுவலித்தாள். பாக்தேவ் ஜன்னலுக்கு வெளியே நிர்மலமாயிருந்த வானத்தைப் பார்த்தவாறு கிம்மதியாகத் தன் மீசையைக் கோதிக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

***

**வெ**ள்ளிப் பனிமலை ஒளி வீசும் நேரத்திலே, பைரவி சந்நிதியிலே பீர்பகதூர் ஜலமதியைக் கைப்பிடித்தான் என்று சொல்லவும் வேண்டுமா?

# வெற்றியின் ரகசியம்

**ந**ண்பர் நாகலிங்கம் முனிசிபல் அங்கத்தினர் தேர்தலுக்கு அபேட்சகராக நிற்கிறார் என்று கேள்விப் பட்டபோது எனக்கு ஏற்பட்ட வியப்புக்கு ஓர் அளவில்லை. 'இவராவது, வெற்றி அடைவதாவது!' என்றுதான் தோன்றியது. இந்த மனுஷ்யருக்கு இருக்கும் நண்பர்களே வெகு சொற்பம். அத்துடன் அநேகருடன் இவருக்குப் பேச்சு வார்த்தை கூடக் கிடையாது. போதாக் குறைக்கு அவரை ஆதரித்துத் தேர்தலுக்கு நிறுத்தி வைத்த கோஷ்டியே அவருக்கு எதிராகப் பிரசாரம் செய்யத் தொடங்கி விட்டது. அப்படியிருக்கும்பொழுது யார்தான் அவருக்கு வெற்றி கிட்டக்கூடும் என்று எண்ணுவார்கள்!

அவரை எதிர்த்து நின்றவரோ மிகப் பிரபலஸ்தர். நகரத்துப் பிரமுகர்களில் மிக மிக முக்கியமானவர். அவர் வாய் அசைத்தால் நடக்காத காரியம் கிடையாது என்று கூடச் சொல்லிக் கொண்டார்கள். அவ்வளவு செல்வாக்குப் படைத்தவருக்குத்தான் வெற்றி கிடைக்கும் என்று குருடன் கூடக் கண்களை மூடிய வண்ணம் சொல்லி விடுவானே! எனவே, நானும் அப்படித்தான் எண்ணினேன். ஆனால் எல்லோரும் எதிர் பார்த்ததற்கு மாறாக, நண்பர் நாகலிங்கத்துக்கு வெற்றி கிட்டவே, எனக்கு இன்னும் வியப்பு மேலிட்டது. ஆகவே, நேரில் சென்று விசாரித்து அவருக்கு வாழ்த்துக் கூறி வருவோம் என்று புறப்பட்டேன்.

நான் புறப்பட்ட வேளை, நல்ல வேளை! அவர் வீட்டிலேயே இருந்தார். அதுவும் கூட்டம் கீட்டம் இல்லாமல் தனியாக இருந்தார்.

"மிஸ்டர் நாகலிங்கம்! தேர்தலில் வெற்றி பெற்றதன் பொருட்டு என் கூடை கூடையான வாழ்த்துக்களை ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்றேன். நாகலிங்கம் மௌனப் புன்னகையுடன் என் வாழ்த்துக்களை ஏற்றுக் கொண்டார்.

அப்பொழுது என் மனம் அவரிடம் ஒரு கேள்வி கேட்க வேண்டும் என்று துடியாய்த் துடித்தது. இருந்தாலும் நாம் அந்தக் கேள்வியைக் கேட்டு, நாகலிங்கம் அதை வித்தியாசமாக எடுத்துக் கொண்டு விட்டால் என்ன செய்வது என்று யோசனையாக இருந்தது. இருந்தாலும் மனம் கேட்கவில்லை. எனவே, கேட்டே விடுவது என்று முடிவுக்கு வந்தவனாய், "மிஸ்டர் நாகலிங்கம்! நான் ஒரு கேள்வி கேட்டால் கோபித்துக்கொள்ள மாட்டீர்களே!" என்று பூர்வ பீடிகையுடன் ஜாக்கிரதையாகவே ஆரம்பித்தேன்.

"கோபம் என்ன! தாராளமாகக் கேளுங்கள்!" என்று அநுமதி அளித்தார் நாகலிங்கம்.

"வந்து...வந்து...உங்களுக்குத்தான் நண்பர்கள் வெகு குறைவாயிற்றே! அத்துடன், இருக்கும் நண்பர்களுடன் கூடக் கொஞ்ச நாட்களாகப் பேச்சு வார்த்தை கிடையாதே! தேர்தலுக்கு உங்களை நிறுத்திவைத்த கோஷ்டியார்கள் கூடச் சமயத்தில் காலை வாரி விட்டு எதிர்க் கட்சியில் சேர்ந்து கொண்டு விட்டார்களே! அப்படியிருக்கும் பொழுது உங்களுக்கு எப்படி வெற்றி கிடைத்தது!" என்று கேட்டேன்.

"அதுவா! நேற்றுவரை எனக்கும் இது புரியாத பெரிய புதிராகத்தான் இருந்தது. ஆனால் இன்று அதன் ரகசியம் விளங்கிவிட்டது. எனக்கு நண்பர்கள் அதிகமில்லை என்பது உண்மைதான். என்னைத் தெரிந்தவர்களும் வெகு சொற்பமே! அதுவேதான் எனக்கு நல்லதாக முடிந்தது என்று சொன்னால் மிகையாகாது. என்னை எதிர்த்து நின்றவருக்கோ ஏராளமான நண்பர்கள். அவரைத் தெரியாதவர்களே கிடையாது என்று சொன்னாலும் பொருந்தும். என்னைத் தெரிந்தவர்கள் எனக்கு வோட்டுக் கொடுக்கவில்லை. அதேபோல அவரைத் தெரிந்தவர்கள் அவருக்கு வோட்டுக் கொடுக்கவில்லை. வோட்டுக்கள் மாறாட்டம் அடையவே வெற்றி என் பக்கமாகிவிட்டது. இப்பொழுது என் வெற்றியின் ரகசியம் விளங்கிற்று!" என்று கேட்டார் நாகலிங்கம். வெற்றியின் ரகசியம் விளங்கிவிடவே, நான் அவருடைய முகத்தைப் பார்த்தேன். அப்பொழுது அவருடைய முகத்தில் வெற்றிப் புன்னகை தவழ்ந்துக் கொண்டிருந்தது. — அஜயம்.



## நான்காவது வட்டம்—
## அடித்துத்தள்ளின வெற்றி

அவனுடைய சக்தி மேர்ரக்கருந்தது. அவனுடைய கைக்குத்துகள் பயங்கரமானது. அவனுடைய உணவு துஷார் வனஸ்பதியினுல் போஷிப்பிக்கப்பட்டது. துஷார் அவனுடைய உணவில் அதிக சக்தியைச் சேர்ந்தது.

அவனுடைய உணவு சமைக்கப்பட்டிருந்தது




# துஷார்
## வனஸ்பதியில்

இரட்டிப்பாக சுத்தப்படுத்தி கை படாமல் செய்யப்பட்ட வனஸ்பதி ஆரோக்கியமான முறையில் பாக் செய்யப்பட்டது.

T-6/53

**துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கர்னூல்.**

# இரு குழந்தைகள்

வேம்பு



ஆபீஸிலிருந்து வந்த அனந்தராமன் கோட்டைக்கூடக் கழற்றவில்லை. பத்மா தூக்கிய முகத்துடன் அவனை வரவேற்றாள். மௌன நாடகத்துடன் காப்பி டிபனைக் கொண்டு கொடுத்தாள்.

"கந்து எங்கே பத்மா!" என்று கேட்டான் அனந்தராமன். ஆறு வயதுகூட நிரம்பாத ஒரே மகனை கந்தரேசனின் பேரில் அனந்தராமனுக்கு அலாதியான பிரியம்.

பத்மா உடனே பதில் பேசாததும் முகத்தை என்னமோ போல் வைத்துக் கொண்டிருப்பதும் அனந்தராமனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

"என்ன, பத்மா! என்ன சமாசாரம்! ஏன் பேச மாட்டேன் என்கிறாய்!" என்று மறுபடியும் கேட்டான்.

பத்மா மேஜைமீதிருந்த காலி காப்பி டம்ளரை எடுத்த வண்ணம் "இந்தாங்கோ! இப்பவே சொல்லிவிட்டேன். இருபத்துநாலு மணி நேரத்திலே வேறு வீட்டைப் பாருங்கோ. எங்கே பார்ப்பீர்களோ என்ன செய்வீர்களோ, எனக்குத் தெரியாது" என்று சொல்லி விட்டுச் சமையல் அறைக்குப் போய் விட்டாள்.

வீட்டுக்காரர் வாஞ்சிநாதய்யருடன் கடந்த மூன்று மாதங்களாகவே அத்தனை சுமுகமான உறவு என்று சொல்வதற்கில்லை. வாஞ்சிநாதய்யரின் சஹதர்மிணி காவேரியின் ஆக்ஞையும் கட்டுப்பாடும் பத்மாவினால் சகிக்க முடியவில்லை.

"இந்த வீட்டுக்குக் குடித்தனம் வரும்போதே சண்டைக்கார வீடென்பது எனக்குத் தெரியும்" என்பாள் பத்மா.

"எனக்குக்கூடத் தெரியுமே, போகுமிடமெல்லாம் நீ சண்டை போட்டுக் கதிகலங்க வைப்பாய் என்று!" என்பாள் காவேரி கட்டைத் தொண்டையுடன்.

மேலே பேச முடியாத பத்மாவுக்குக் கண்களில் நீர் ததும்பும். கணவர்தான் அடைக்கலப் பொருள் ஆவார். ஸ்ரீமான் அனந்தராமனும், வாஞ்சிநாதனும் அரை மணி நேரம் இதைப் பற்றித் தர்க்கம் புரிவர். என்னவென்றாலும் வாஞ்சிநாதர் வீட்டுச் சொந்தக்காரர் ஆயிற்றே! அவரது குரல் ஓங்கியே இருக்கும். சுபாவமாகவே அடக்க குணமுள்ள அனந்தராமன் தன் வேலையைப் பார்க்கப் போய் விடுவான்.

இவர்களுடைய தர்க்கப் பிரதி தர்க்கங்களின் போது அனந்தராமனின் மகன் கந்துவும், வாஞ்சிநாதய்யரின் சிமந்த புத்திரன் சீனுவும் மெத்தைப் படிக்கட்டில் உட்கார்ந்து விளையாடிக் கொண்டிருப்பார்கள். கள்ளங் கபடமறியாத அவர்களுடைய அன்னியோன்னியம் பெற்றோர்களின் பூசலுக்கு நேர் விரோதமாயிருக்கும்.

"ஏன்தான் இப்படிச் சண்டை போட்டுக் கொள்கிறார்களோ!" என்பான் சீனு பொம்மைக் குதிரையின் கழுத்தில் கயிற்றைக் கட்டிய வண்ணம்.

"அதுதானடா எனக்கும் தெரியவில்லை" என்பான் கந்து, கிருஷ்ணன் பொம்மையின் தலையில் மயில் இறகைப் பிணைத்த வண்ணம்.

மறு விநாடி காவேரி அங்கு பிரசன்னமாவாள்.

"இங்கே வாடா சீனு. உனக்கு எத்தனை தடவை சொல்கிறது! அவனோடு விளையாடாதே என்று! போ! ஸ்லேட்டெடுத்துக் கணக்குப் போடு" என்று அதட்டுவாள். பிறகு அந்த இணை பிரியாத இரு உள்ளங்களைப் பிரித்து விட்ட பெருமையுடன் சீனுவின் கையைப் பிடித்துத் தரதரவென இழுத்துச் செல்லுவாள்.

ஏங்கிய முகத்துடன் உள்ளே வரும் கந்துவுக்கு இரகசியமாக இரண்டு அறை விழும். அதைத் தொடர்ந்து, "இந்த அறையை விட்டு வெளியே போ, சொல்லுகிறேன்" என்று அவளுடைய அழுத்தமான குரலும் கேட்கும்.

இரவு அன்று நடந்த யுத்தத்தின் சுருக்கம் அனந்தராமனுக்கு அறிவிக்கப் படும்போது அவன் தலையைப் பிடித்துக் கொள்வான். அந்த வீட்டை விட்டு உடனே வேறு வீடு பார்க்க வேண்டும் என்று சங்கல்பம் செய்து கொள்வான். ஒருவாரம் அமைதி நிலவும். பிறகு சீனு கந்து சந்திப்பு ஏற்படும். மறுபடியும் அதே பழைய கதை.

அன்று கந்துவும் சீனுவும் விளையாடிக் கொண்டிருந்தனர். கந்துவின் யானைமீது சீனுவின் கிருஷ்ணர் பொம்மையை வைத்துக் கட்டிச் கந்து இழுத்துக் கொண்டு தாழ்வாரமும் கூடமும் ஓடியவண்ணம் இருந்தான். சீனு ஒரு தகர டப்பாவை மேள வாத்தியம்போல் ஓசைப்படுத்திக் கொண்டிருந்தான்.

தொலைவில் இருந்து பார்த்துக் கொண்டிருந்த காவேரிக்கு முகத்தில் என்னும் கொள்ளும் வெடித்தன.

கந்து இழுத்து வந்த வேகத்தில் சட்டென்று யானை தூணில் மோதவே, யானை மீதிருந்த பொம்மை சிதறி தூளியாகியது.

"டேய், டேய்! பொம்மையடா!" என்று கூவி ஓடிவந்த சீனு உடைந்து கிடந்த கிருஷ்ணரைப் பார்த்துத் திகைத்து நின்றுவிட்டான். கந்துவுக்கும் பயம்தான். ஆனால் குழந்தைகள் மறுகணம் சமாளித்துக்கொண்டு விட்டன.

"பரவாயில்லையடா! நீயும் நானும் ஆளுக்கொரு பாதி வச்சுக்கலாமடா" என்று பெருந் தன்மையுடன் சொல்லி விட்டான் சீனு.

காவேரிக்கு இது தாங்கவில்லை. அந்த இடத்திற்கு வந்தாள். பிரமாதமாகக் கத்த ஆரம்பித்து விட்டாள். கந்துவின் விஷமத் தனத்தைக் குறித்து அசாத்தியமாகப் பேச ஆரம்பித்து விட்டாள். கந்துவுக்கு விஷமம் கற்றுக் கொடுத்த



மெலி: ஓ! அதுவா கேட்கறே! பெரியவர் குழந்தையைத் தூங்கப் பண்ணுகிறதற்காகவே பாடிக்கொண்டு போகிறார். குடி விருப்பவர்களுக் கெல்லாம் பாடத் தெரியாது. அதனாலே பெரியவர் பின்னாலே அவர்கள் குழந்தைகளுடன் அவர் எங்கு போனாலும் கூடவே போய்க் கொண்டிருக்கிறார்கள்!

தாகப் பத்மாவின்மீது பழி சுமத்தினாள். பழி தாங்காப் பத்மா பதிலுக்குப் பேசினாள். பேச்சும் ஏச்சும் பேச்சுமாகப் பரிமாறப்பட்டன.

ஏக்கத்துடன் தூண் ஓரமாக நின்றிருந்த சுந்து பெரும் குற்றம் செய்தவனாகப் பத்மாவின் கண்களுக்குப் படவே, இரண்டு மூன்று அடிகள் படபட வென்று விழுந்தன. அலறிக் கொண்டு சுந்து "அத்தை வீட்டுக்குப் போகிறேன், போ" எனக் கூறி ஓடி விட்டான்.

பத்மாவுக்கு அந்தச் சம்பவம் நடந்து ஒரு மணி நேரமாகியும் படபடப்புத் தீரவில்லை. கணவன் வந்தபோதும் வழக்கம் போல் சுமுகமாக வரவேற்கத் தோன்றவில்லை. உடனே வேறு வீடு பார்த்தாக வேண்டும் என்ற பிடிவாதம் அவளிடம் ஓங்கி நின்றது.

அனந்தராமனும் உடனே எங்கோ போனான். திரும்பிப் பத்து மணிக்கு வரும்போது வேறு வீட்டைநிச்சயித்துக்கொண்டு வந்தான். "பத்மா! நாளைக்கே சாமானை எடுக்க வேண்டும். தயார் செய்" என்று கட்டளை யிட்டான்.

வீட்டைக் காலி செய்யும் போது அனந்தராமனுக்கு வாஞ்சி நாதய்யருடன் சண்டை பிடிக்க வேண்டும் போலிருந்தது. வாஞ்சி நாதய்யருக்குத் தோன்றாவிடினும் காவேரியின் தூண்டுதல் அட்வான்ஸ் திருப்பிக் கொடுக்கும் விஷயத்தில் தகராறை எழுப்பியது.

சீனுவும் சுந்துவும் ஏங்கும் கண்களுடன் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். சுந்து வேறு வீட்டிற்குப் போய் விட்டான்.

"அம்மா! சுந்து வர மாட்டானா, அம்மா!" என்று கேட்டான் சீனு.

"சீ... அந்தத் தங்கமான பொம்மையை உடைத்தான். இன்னும் அவனுடன் சிநேகமா!" என்று அதட்டினாள் காவேரி.

சீனுவுக்குப் பொழுதே போகாது. திக்பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருப்பான். அதே ஏக்கம் அவனைப் படுத்த படுக்கையாக்கி விட்டது. அங்கு சுந்துவுக்கும் அதே நினைவுதான். "அம்மா! சீனு வீட்டுக்குப் போக மாட்டோமா அம்மா!" என்பான். பத்மா யோசித்துப் பார்ப்பாள். பார்க்கப் போனால் சண்டையே இல்லை. ஒத்துப்போ

விருப்பதென்றால் போயிருக்க முடியாதா! அவன் உயர்வா, தான் உயர்வா என்னும் போட்டி மனப்பான்மைதானே சண்டையை வளர்த்தது! சீனுவின் பொம்மையைச் சுந்து உடைத்தது தவறுதானே! அதற்காகத் தான் பதட்டத்துடன் பேசியிருக்கக் கூடாது" என்று ஒரு சமயம் எண்ணுவாள். 'அது முடியுமா! அவளுக்குத்தான் எத்தனை ஆத்திரம்! குழந்தையைக் கண்டால் எத்தனை கடுகடுப்பு! அவளைப் பார்த்தாலே பேசக் கூடாது' என்று முடிவு கட்டுவாள்.

குழந்தையின் பிஞ்சு உள்ளங்கள் இரண்டு தாய்களுக்கும் தெரியவில்லை. பெற்றோர்களின் உள்ளம் போட்டியையும் பொறாமையையும் நாடியது. குழந்தைகளின் பிஞ்சு உள்ளங்களோ பிரிக்க முடியாத சிநேக இன்பத்தை நாடின.

ஏக்கம் சீனுவுக்கு நோயை விளைவித்து விட்டது. படுத்த படுக்கையாக ஆன சீனுவுக்குக் கை மருந்து பயன்படவில்லை. வழக்கமாகப் பார்க்கும் டாக்டராலும் தீர்க்க முடியவில்லை. அவர் எழுதிக் கொடுக்கும் மருந்தால் சீனுவின் நோய் தீரவில்லை.

"அவன் என்ன செய்துவிட்டுப் போனானோ! அவன் போன நாளாகக் குழந்தை படுத்துக் கொண்டு விட்டதே!" என்பாள் காவேரி பத்மாவைக் குறிப்பிட்டுக் கணவரிடம்.

'ஆமாம்' என்று கூற முடியாமலும் 'இல்லை' என்று சொல்ல முடியாமலும் திண்டாடுவார் வாஞ்சிநாதய்யர்.

சரியாகப் பேசாமலும், முகம் வெளுத்துப் போயும் இருந்த சீனுவைக் காணக் காண அவருக்கு வருத்தம் பொங்கும்.

"நாலாவது தெருவிலே புது டாக்டர் சாயங்காலம் ஒருமணி நேரம் தான் இருப்பாராம். நல்ல கைராசிக்காரராம்" என்று யாரோ சொல்லக் கேட்ட வாஞ்சிநாதய்யர் ரிக்ஷாவில் சீனுவை அந்த டாக்டரிடம் அழைத்துச் சென்றார்.

அந்த டாக்டர் வீட்டில் ஏகக்கூட்டம். சீனுவை டாக்டரிடம் காட்டி விட்டு சீட்டைக் கொண்டு மருந்து வாங்கக் கம்பௌண்டர் அறைக்குச் சென்றார் வாஞ்சிநாதய்யர். சீனு வெளிப் பெஞ்சியில் உட்கார்ந்திருந்தான்.

மருந்து வாங்கிக்கொண்டு திரும்பி வந்து பார்த்தார் வாஞ்சிநாதய்யர். சீனுவை அங்கே காணவில்லை. அவ்விஷயம் அவரைத் திடுக்கிடவைத்தது.

"சீனு, சீனு!" என்று கூப்பிட்டார். டாக்டர் வீடு முழுவதும் தேடினார். மருந்து வாங்க வந்தவர்களும் "இப்போ இருந்தானே பையன்!" என்றனர்.

வாஞ்சிநாதய்யருக்கு ஒன்றுமே புரியவில்லை. நோயால் நடக்கக்கூட முடியாத தன் மகன் எங்கே போயிருப்பான் என்று அவரால் நினைக்கக் கூட முடியவில்லை.

அந்தத் தெருக் கோடியில் உள்ள கோயிலில் உற்சவம். கடைகளும் வேடிக்கைகளுமாக 'ஜே' 'ஜே' என்றிருந்தது. 'சீனு, சீனு' என்று கூவிக் கொண்டே வாஞ்சிநாதய்யர் பிரமை பிடித்தவர் போல் நடந்து கொண்டிருந்தார். சங்கராட்டினம்

சுற்றிக் கொண்டிருந்த இடத்துக்கு வந்தபோது ''மாமா, மாமா'' என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்த வாஞ்சிநாதய்யர் கந்துவைப் பார்த்தார். பழைய மனஸ்தாபம் நினைவில் இராமல் ''ஏண்டா! எங்கள் சீனுவைப் பார்த்தாயா!'' என்று பரபரப்புடன் வினவினர்.

சீனு என்றவுடன், ரங்கராட்டினக் குதிரையினின்று குதித்தோடி வந்த கந்து, ''இல்லையே, மாமா! அவனை நான் பார்த்து ரொம்ப நாளாச்சு, மாமா!'' என்றான். ஒன்றும் பேசாமல் விழித்த வண்ணம் நின்று கொண்டிருந்த அவரைப்பார்த்து, ''மாமா, மாமா! ஏன் மாமா நிற்கிறீர்கள்! எங்க வீட்டுக்கு வந்துவிட்டுப் போங்களேன் மாமா, இங்கேதான் இருக்கிறது!'' என்றான்.

ஒன்றும் புரியாதவராய்க் கட்டுண்ட பாம்பைப் போல் கந்துவைப் பின் தொடர்ந்து வாஞ்சிநாதய்யர் சென்றார். அருகிலிருந்த கந்துவின் வீட்டையடைந்த போது பத்மா சீனுவைத் தூக்கிக் கொண்டு நிற்பதைக் கண்டார்.

''ஏண்டா, இப்படி இளைச்சுப் போயிட்டியே! கெட்டியாட்டமா ஆயிட்டையே!'' என்று கேட்டுக் கொண்டிருந்ததைப் பார்க்கும்போது வாஞ்சிநாதய்யருக்கு ஒன்றும் புரியவில்லை.

'சீனு!' என்று ஏககாலத்தில் கந்துவிட மிருந்தும், வாஞ்சிநாதய்யரிட மிருந்தும் ஆச்சரியக் குரல்கள் வெளிப்பட்டன.

டாக்டர் வீட்டில் தன் தகப்பனார் மருந்து வாங்கிக் கொண்டிருக்கும்போது சீனு கந்துவின் தாயார் போவதைப் பார்த்திருக்கிறான். கந்துவின் நினைவு அவனை உட்கார விடவில்லை. அந்த மாமியுடன் போனால் கந்துவைப் பார்த்துவிட்டு வந்து விடலாம் என்று பத்மாவைப் பின் தொடர்ந்திருக்கிறான். உடம்பு அசதியால் வேகமாக நடக்க முடியாதவனாய் மெள்ளப் போய்ச் சேர்ந்து ''மாமி'' என்று கூப்பிட்டவனைப் பத்மா அடையாளங் கண்டு கொண்டாள். பகைமை உணர்ச்சி ஓடிவிட்டது. எனவே, அவள் அப்படியே வாரி எடுத்தணைத்துக் குழந்தையை முத்தமிட்டாள்.

*      *      *

வாஞ்சி நாதய்யர் ஒரு நாள் காவேரியிடம் இதைச் சொல்லிப் பெருமைப் பட்டு, ''காவேரி, வீணாக அவர்களைச் சண்டை போட்டுக் கிளப்பினோம். அவர்களைப் போல் நல்லவர்கள் வரமாட்டார்கள்'' என்று கூறினர்.

''நான் போகச் சொன்னேனா! ஏதோ இரண்டு வார்த்தை நான் அதிகமாகச் சொல்லியிருக்கலாம். அவளும் தான் சொன்னாள். இப்ப என்ன! சீனுவின் உடம்புதான் சேராகிவிட்டதே! அவன் மனம் கோணவிடலாமா!'' என்றாள் காவேரி.

அனந்தராமனும், பத்மாவும் உட்கார்ந்து சீனு கந்துவைத் தேடி வந்ததையும் கந்து அவன் அப்பாவை அழைத்து வந்ததையும் பேசிக் கொண்டிருந்தபோது வாஞ்சிநாதய்யர் அங்கே வந்துவிட்டார். ''மிஸ்டர் அனந்தராமன், போனதெல்லாம் போகட்டும். நீங்கள் இருந்த போர்ஷன் அப்படியே 'காலி'யாகத் தான் இருக்கிறது. அந்த இரண்டு குழந்தைகளுக்கிருந்த பாசமிக்க உள்ளம் நமக்கில்லை, பாருங்கள்! நானே இங்கிருந்து கிளம்பி வந்துவிட வேணும்'' என்றார்.

கந்துவை அணைத்து கொண்ட வண்ணம் அனந்தராமன், ''இந்த இரு குழந்தைகளின் உள்ளத்தை யாராலும் பிரிக்க முடியவில்லை, பார்த்தீர்களா!'' என்றான். அப்போது கந்து ஏதோ பிரமாதமாகத் தெரிந்து கொண்டு விட்டவன் போல் களுக்குச் சிரிப்புச் சிரித்தான்.

# கடைசி நேரத்திலே!

சம்பந்தம்

ஹிரோஷிமாவில் அணுகுண்டு போட்டுங்கூட கங்ஙுங் பிரபு வருத்தப்பட்டுக் கொள்ளவில்லை. அப் பட்டணமே தரை மட்டமாகி, ஒன்றுமில்லாத வெறும் வனாந்தரமானபொழுது கங்ஙுங்கின் கூடகோபுரம், மாட மாளிகையைப் பற்றிக் கேட்பானேன்! எல்லாம் தூள் தூளாகப் பறந்தொழிந்தன. ஆனால் டோக்கியோ நகரத்திலிருந்த அவன் சொத்துக்களுக்கும் துறைமுகத்திற்கு அடிக்கடி வந்து சென்று கொண்டிருந்த அவனுடைய கப்பல்களுக்கும் எவ்விதமான சேதமுமில்லை. நல்ல வேளையாக அதற்குள் யுத்தமும் முடிந்து விட்டது!

திடகாத்திரமாயிருந்த அவனுக்கு ஏனோ அடிக்கடி உடம்புக்கு வர ஆரம்பித்தது. நாளுக்கு நாள் அவன் தேகமும் இளைத்துக் கொண்டு வந்தது. பெரிய பெரிய டாக்டர்களெல்லாம் வந்து உடம்பைப் பரிசோதித்துப் பார்த்தார்கள். அவனுடலில் ஒரு குறையுங் காணோம். அப்படியிருக்கும் பொழுது அடிக்கடி உடம்புக்கு வருவானேன்! டாக்டர்கள் மூளையைக் குழப்பிக் கொண்டார்கள். தன் உடம்பின் வியாதியைச் சரியாய்க் கண்டு பிடிக்கவில்லையே என்றுகூட கங்ஙுங் வருத்தப்பட்டுக் கொள்ளவில்லை; நம் நாட்டின் பெயரைக் கெடுக்க இம்மாதிரி டாக்டர்கள் வந்து வாய்த்திருக்கிறார்களே என்றுதான் தலையிலடித்துக் கொண்டான்.

சண்டை முடிந்து சமாதானம் ஏற்பட்டவுடனே வைத்திய மேற் படிப்பிற்காக அரசாங்கச் செலவில் வெளிநாடு சென்றிருந்த ஜப்பானிய இளைஞர்களனைவரும் டோக்கியோவுக்குத் திரும்பினார்கள். அவர்களுள் ஒருவன் கங்ஙுங்கின் உடம்பை நன்றாய்ப் பரிசோதித்துப் பார்த்து விட்டு, "நீங்கள் இரண்டு மூன்று மாதங்களேனும் கப்பல் பிரயாணத்திலேயே வசித்திருந்து விட்டுத் திரும்புங்களேன்; உடம்பு சரியாகி விடும்!" என்றான். "அப்படிக்கூட ஒரு வியாதியுண்டா?" என்று ஆச்சரியப்பட்டான் கங்ஙுங். "இல்லை. நான் சொன்னபடி செய்து பாருங்கள். மூன்று மாதங்களுக்கப்புறம் வந்து உங்களைப் பார்க்கிறேன்" என்று சொல்லிப் போய் விட்டான் அந்த வாலிபன்.

அவனுடைய ஆலோசனைப்படிதான் செய்து பார்ப்போமே என்று கங்ஙுங் மறுநாளே கப்பல் பிரயாணத்தை ஆரம்பித்து விட்டான்.

வீட்டிலிருந்தது போல் கப்பலில் வெறுமனே உட்கார்ந்திருக்க முடியுமா! அதிலும் அது அவனுடைய சொந்தக் கப்பல்! அங்கு சென்றான், இங்கு சென்றான். கப்பலில் நடக்கும் வேலைகளைத் தனையும் நேரிலேயே கண்காணித்தான். காலையிலும் மாலையிலும் தவறாமல் கப்பல் விளிம்பில் வெகுநேரம் அமர்ந்து கிடப்பான். உதய சூரியனும் அஸ்தமன சூரியனும் அவனுக்கு எத்தனையோ உவகை யூட்டினர். இன்னும் கடற் பரப்பில் துள்ளி விழும் கருமீன்களையும் தூரத்தில் அசைந்து செல்லும் திமிங்கிலங்களையும் கண்டு அவன் மனம் மகிழ்ந்தான்.

விளையாட்டாகக் கப்பல் பிரயாணம் ஆரம்பித்து இரண்டு மாதங்களுக்கு மேலாகிவிட்டன. இன்னும் கங்ஙுங்கை டாக்டர்கள் சுற்றிக் கொண்டுதானிருந்தார்கள். உடம்பு குணமாகவில்லை. ஆனால் அவன் மனத்தில் மாத்திரம் என்றுமில்லாத ஒரு புதுவிதத் தென்பு பிறந்திருந்தது.

ஒருநாள் மாலை நீராவிப் படகைக் கீழே யிறக்கச் சொல்லிக் கப்பலுக்குச் சமீபமாகவே உல்லாசப் பிரயாணம் சென்று திரும்பினான் கங்ஙுங். அது அவனுக்கு ரொம்பவும் பிடித்திருக்கவே, தினமும் தவறாமல் சென்று வர ஆரம்பித்தான்.

அன்றைய தினம் வேண்டுமென்றே கப்பலை விட்டு வெகுதூரம் சென்றான். கடலைக் கிழித்துக் கொண்டு நீராவிப் படகு போகும் ஓசையும், கடல் நீர் பின்னே விரிந்து மடிந்து விழுந்து ஒன்றுகும் ஓசையும் தவிர வேறு எவ்வித ஓசையுமில்லை. கங்ஙுங் எழுந்து நின்று இடுப்பில் கை வைத்து நாலாபக்கமும் பார்த்துக் கொண்டிருந்தான். திடுக்கென்று விசித்திரமான ஐந்தாறு பெரிய மீன்கள் அப்படகை மோதிச் சென்றன. 'அடடா! கையில் கத்தியோ அல்லது துப்பாக்கியோ இருந்திருந்தால் இத்தனை நாழிகை இவைகளை ஒரு கை பார்த்திருக்கலாமே!' என்று ஆள்காட்டி விரலை வெடுக்கென்று கடித்துக் கொண்டான் கங்ஙுங்.

அன்று மாலையே கப்பல் வேறு துறைமுகத்துக்குப் புறப்பட்டு விட்டது. கங்ஙுங் அன்றிரவு நன்றாக அயர்ந்து தூங்கினான். இருந்துங்கூட மறுநாள் அதிகாலையிலேயே டாக்டர்கள் வந்து அவனைப் பரிசோதித்துப் பார்த்து விட்டு ஏதோ மருந்து கொடுத்துப் போனார்கள். கப்பல் பிரயாணத்தால் ஒரு சுகத்தையுங் காணோமே என்று கங்ஙுங் வருத்தப்பட்டுக் கொண்டான். அப்பொழுது அந்தப் பக்கம் மீன் வேட்டையில் பெயர் போன மிங்சுவாங் சென்றான். உடனே அவனையும் கூட்டிக் கொண்டு பலவித ஆயுதங்களுடன் நீராவிப் படகில் மீன் வேட்டைக்குப் புறப்பட்டு விட்டான் கங்ஙுங்.

படகு வெகு தூரம் சென்றது. ஓரிடத்தில் அநேகம் சின்னஞ் சிறு தீவுகள் சிதறிக் கிடந்தன. எங்கும் ஜன சஞ்சாரமேயில்லை. ஏன்! அந்த இடத்தில் அதிக மீன்களையுங்கூடக் காணோம்.

அப்பொழுது ஜல மட்டத்துக்கு வெளியே பெரிய தாம்பாளம் போன்ற இரண்டு கண்கள் தெரிந்தன கங்ஙுங்கிற்கு. ஒருவிதப் பச்சை நிற ஒளி அதில் மின்னியது. ரயில் வண்டி போக்கு வரத்துக்குச் சமிக்ஞை காட்டும் விளக்குகள் மாதிரியே அவை பளபளத்தன.

"மிங்சுவாங்! மிங்சுவாங்! அதைப் பார்த்தாயா!" என்றான் கங்ஙுங்.

"எதை! எங்கே!" என்று அதைச் சரியாய்க் கவனிக்காமல் தடுமாறினான் மிங்சுவாங். அதற்குள் அமைதியாயிருந்த கடல் நீர் சளசள வென்று அலைப்பட்டது; பிரும்மாண்டமான ஒரு பிராணி நீரைக் கலக்கினதாகத் தெரிந்தது. அந்த இரு பச்சை நிற வட்டங்களும் சற்று இடம் பெயர்ந்து காணப்பட்டன.

அப்பொழுதுதான் அவை மிங்சுவாங்கின் கண்களில் பட்டன. உடனே அவன் எகிறிக் குதித்தான். பெரிய அலைபோல் தண்ணீர் புரண்டு வந்து படகைத் தாக்கியது. அப்பொழுது பிரும்மாண்டமான கருநாகங்கள் போல் வளைந்து வளைந்து ஏதோ சில அவயவங்கள் நீர் மட்டத்துக்கு மேலே எழும்பிப் பிறகு நீரில் மூழ்கின. அதைப் பார்த்து



எஜமானியம்மாள் (தன் வேலைக்காரியைப் பார்த்துக்கோபத்துடன்):—இன்றைக்குத் திங்கட்கிழமை, நாளைக்குச் செவ்வாய்க் கிழமை, மறுநாள் புதன், அப்புறம் வியாழன், பிறகு வெள்ளி, சனி! ஆயிற்று. வாரம் முழுவதும் ஓடிப்போய் விட்டது!—நீ இத்தனை நாளைக்கு என்ன வேலை செய்திருக்கிறாய்?

விட்டு. "ஐயோ! இது ராட்சத நீர்ச் சிலந்தியல்லவா! இன்று நாம் செத்தோம்!" என்று கத்தினான் மிங்கவாங். "என்ன! இப்படிப் பயந்து சாகிறாயே!" என்று கத்தியையும் துப்பாக்கியையும் தேடினான் கங்குங். ஆனால் என்ன கொடுமை! அதற்குள் திடீரென்று பாம்புபோல் அதன் கை ஒன்று வெளியே கிளம்பி மிங்கவாங்கை இறுக்கிப் பிடித்து இழுத்தது. "ஐயோ, ஐயோ!" என்று அலறினான் மிங்கவாங்.

உடனே கங்குங் அவனை கெட்டியாகப் பிடித்து, தன் பலங் கொண்ட மட்டில் படகினுள் இழுத்தான். ஆனால் எதிர்ப்பலம் கொஞ்சங்கூடச் சளைக்கவில்லை; அவனைக் கட்டிப் பிணைத்து வெளியே இழுத்துக் கொண்டிருந்தது. அதற்குள் மிங்கவாங் அரைப் பிணமாகி விட்டான்.

பார்த்தான் கங்குங். மெதுவாகத் தூரத்தில் கிடந்த கத்தியைக் காலினால் அருகில் தள்ளி அவனைக் கெட்டியாய்ப் பிடித்திழுத்துக் கொண்டே வாயால் கௌவி யெடுத்தான். அதற்குள் அந்தப் பிராணியின் மற்றொரு கை எழுந்து, கங்குங்கையும் கட்டிப் பிடிக்கத் துழாவிற்று. உடனே மிங்கவாங்கைச் சுற்றி வளைத்துக் கொண்டிருந்த உறுப்பில், பலமான ஒரு கத்திக் குத்து வைத்தான் கங்குங். அவ்வளவுதான். கட்டுப் பிரிந்தது. கரங்களை உள்ளுக் கிழுத்துக்கொண்டு விட்டது அந்தப் பிராணி. "திருப்பு! வேகமாய்த் திருப்பு, படகை!" என்று கத்தினான் மிங்கவாங்.

பிரும்மாண்டமான அதன் பச்சை நிறக் கண்கள் ஒரு கணம் பளிச்சென்றும், மறுகணம் மங்கியும் மாறிமாறிப் பிரகாசித்தன. யாரோ நீருக்குள்ளிருந்து கொண்டு விளக்குகளைத் தூண்டியும் தணித்தும் வருவதுபோல் அது தோன்றியது. நீரைக் கிழித்துக் கொண்டு படகு கப்பலைப் பார்க்கக் கனவேகமாகப் பறந்தது. இருவரும் அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டார்கள்.

அன்றிரவு முழுவதும் கங்குங்கிற்கு இதே யோசனைதான். எப்படியும் அந்தப் பசிபிக் பிசாசைத் தொலைத்துக் கட்ட வேண்டுமென்று தீர்மானித்து, ஏதேதோ புதுப்புது ஆயுதங்களையெல்லாம் சேகரித்தான். மிங்கவாங்தான் எமன் வாய் வரை சென்று திரும்பினவனாயிற்றே! எனவே, மறுபடியும் கங்குங்குடன் செல்வதற்குச் சற்று யோசித்தான். அவனுக்கு ரொம்ப தூரம் சொல்லிச் சற்றுத் தைரியப்படுத்தி வைத்தான் கங்குங்.

பொழுது புலர்ந்தது. கீழ்த் திசையில் சூரியன் மேலெழும் ஜோதி அப்பொழுதுதான் உதயமாயிற்று. வழக்கப்படி கங்குங்கின் உடலைப் பரிசோதிக்க டாக்டர்கள் வந்தார்கள். "எனக்கு நேரமில்லை. எல்லாம் பிறகு பார்த்துக் கொள்வோம்" என்று சொல்லி மிங்கவாங்குடன் படகில் ஏறிக்கொண்டு புறப்பட்டு விட்டான் கங்குங்.

கவனமாக இரு மருங்கிலும் பார்த்துக் கொண்டே படகை விட்டார்கள். அந்தப் பொல்லாத கடற் சிலந்தியைக் காணவில்லை. "ஒரு வேளை நேற்றைய கத்திக் குத்தில் இறந்து போயிருக்குமோ!" என்று கேட்டான் கங்குங்.

"உம். இந்தக் கத்திக் குத்துக்கெல்லாமா அது மாண்டு போகும்!" என்று சொல்லிக்கொண்டே நாலாபுறமும் உன்னிப்பாய்ப் பார்த்தான் மிங்கவாங். உடனே, "அதோ!" என்று சிறு தீவுகள் குவியலாய்க் கிடந்த இடத்தைச் சுட்டிக் காட்டினான். தீவுக் கொன்றாக நீண்டு கிடந்த அதன் பாம்புக் கரங்கள், அங்கிருந்தே தெரிந்தன. சரி, இன்று எப்படியும் தீர்த்துக் கட்டி விடுவோம் என்று தன் துப்பாக்கியை எடுத்தான் கங்குங். அதற்குள் அந்த பசிபிக் பிசாசின் கரங்கள் ஒவ்வொன்றாகத் தண்ணீரில் மறையத் தொடங்கின.

ஆனால் சிறிது நேரத்துக்கெல்லாம் அதனுடைய பிரும்மாண்டமான பச்சை நிறக் கண்கள் படகுக்குச் சமீபத்தில் மிதந்தன. அதைப் பார்த்து விட்டு, "திருப்புங்கள், படகை!" என்று ஓரே கத்தலாய்க் கத்தினான் மிங்கவாங். "அதை வேட்டையாட வந்து விட்டுப் படகைத் திருப்புகிறதாவது!" என்று கூர்மையான ஈட்டியைக் கையிலெடுத்தான் கங்குங். அதற்குள் பாம்புக்கரமொன்று வெளியே நீண்டு வந்து அவனைத் துழாவிப் பிடிக்க முயன்றது. கங்குங் அதற்கு அகப்படாமல் நெளிந்து கொடுத்துக் கொண்டே, படகைச் சற்றுப் பின்னால் செலுத்தினான். அந்தக் கடற் சிலந்தியும் கூடவே தொடருவதைக் கண்டு, அதன் கண்களைக் குறி பார்த்துச் சட்டென்று ஈட்டியை வேகமாய் எறிந்தான். உடனே இருவர் மீதும் மழைபோல் ஏதோ ஒருவிதக் கன்னங்கரேலென்ற நீரைப் பீச்சியது அது. "ஐயோ! இது விஷ நீர்! கண்களில் பட விடாதேயுங்கள்!" என்று கத்திக் கொண்டே கண்களைக் கெட்டியாய்ப் பொத்திக் கொண்டான் மிங்கவாங். கங்குங்கும் கண்களைத் துடைத்துக் கொண்டே படகை வேகமாய்த் திருப்பினான். அந்த ராட்சதப் பிராணி கடலையே ஒரு கலக்குக் கலக்கியது. அந்த இடத்தில் தண்ணீரின் நிறம் ஒரே கருமையாக மாறி, பார்க்கவே பயங்கரமாகக் காட்சி யளித்தது. திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே கப்பலுக்கு வந்து சேர்ந்தார்கள் இருவரும்.

அன்றைய தினமே அந்தக் கப்பல், துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டு விட்டது. ஆனால்

கங்குங் மாத்திரம் மிங் கவாங்குடன் அந்த ஊரிலேயே இறங்கி விட்டான். அவன்தான் அந்தக் கடற் பிராணியைத் தொலைத்துக் கட்டாமல் அவ்விடத்தை விட்டு நகருவதில்லையென்று கங்கணங் கட்டிக் கொண்டிருந்தானே! அந்தக் கொடிய ஜந்துவைப் பற்றி அந்த ஊர் ஜனங்களையும் விசாரித்து நிறையத் தெரிந்து கொண்டான். இது வரை அதை எதிர்த்து ஜயித்தவர்கள் ஒருவருமே கிடையாது என்றெல்லாம் சொல்லிக் கொண்டார்கள். இருந்தும் அதைக் கேட்டு கங்குங்கின் மனம் கொஞ்சங்கூடச் சளைக்கவில்லை. அதன் கரங்களனைத்தையும் உடைத்து, அதைப் படகில் வாரிப் போட்டுக் கொண்டு திரும்ப வேண்டும் என்றே தீர்மானித்தான்.

மறுநாளுக்கு மறுநாள் கங்குங் எதிர்பார்த்த படியே அவனுடைய மற்றொரு கப்பல் அதே துறைமுகத்திற்கு வந்து நங்கூரம் பாய்ச்சியது. உடனே அதிலிருந்த நீராவிப் படகைக் கீழே இறக்கச் சொல்லி மிங்கவாங்குடன் புறப்பட்டு விட்டான் கங்குங். வெகு நாழிகை வரை ஏதோ பலியிட அழைத்துச் செல்லும் ஆடுமாதிரி தலை குனிந்து ஏதோ ஆழ்ந்த யோசனையில் கிடந்தான் மிங்கவாங். கங்குங்கின் பிடிவாத குணம் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை அவனுக்கு. "இன்று அந்தப் பக்கம் வேண்டாமே! வேறு திசை சென்றால் என்ன!" என்று ஈன சுரத்தில் கேட்டான் மிங்கவாங். "முடியாது!" என்று நறுக்கென்று பதில் அளித்தான் கங்குங்.

வானத்தில் கருமேகம் திரண்டு வரக் கடல் இருண்டு காட்டியது. எங்கும் ஒருவித நிசப்தம் வேறு. ஆனால் 'உர்ர்ர்......'ரென்று தண்ணீரைக் கிழித்துக் கொண்டு நீராவிப் படகு நெடுகப் போய்க் கொண்டிருந்தது.

குறிப்பிட்ட இடத்தில் படகு தயங்கித் தயங்கி நகர ஆரம்பித்தது. ஆனால் அன்றைய தினமும் அந்த பசிபிக் பிசாசைக் காணோம். அதன் பச்சை நிறத் தாம்பாளக் கண்கள் சமீபத்தில் எங்கேயாவது தென்படுகிறதா என்று கண்ணுக் கெட்டிய வரை சுற்றிச் சுற்றிக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான் மிங்கவாங். அதன் பாம்புக் கரங்கள் சற்றுத் தூரத்திலிருந்த தீவுகளில் நீண்டு கிடக்கின்றனவோ என்று கூர்ந்து பார்த்தான் கங்குங். எங்கேயும் தென்படவில்லை.

உடனே வெடுக்கென்று கைத் துப்பாக்கியை யெடுத்து ஆகாயத்தை நோக்கி ஒரு வேட்டு விட்டான். அந்தச் சப்தத்தைக் கேட்டதுதான் தாமதம், கடலின் அடியிலிருந்து ஒரு பெரிய சலசலப்பு மேலெழுந்து வந்தது. ஒரே சமயத்தில் அக்கடல் ராட்சதனின் ஐந்தாறு பாம்புக் கரங்கள் அப்படகை நோக்கிச் சீறிக் கொண்டு பாய்ந்தன. கையில் ஈட்டியும் கத்தியும் எடுத்துக் கொண்டு இருவரும் தயாராயினர். அக் கரங்களனைத்தும் அப்படகையே சுற்றி வளைக்க வந்தன.

மிங்கவாங் 'ஹோ! ஹோ!' என்று பின் நகர்ந்தான். ஆனால் கங்குங்கோ ஒரே தைரியமாய் அதன் கரங்களிலொன்றைக் கத்தியால் தாக்கினான். அது அந்தக் கரத்தை மாத்திரம் உள்ளுக்கிழுத்துக் கொண்டு, விஷ மசியை பீச்ச ஆரம்பித்தது. படகு சற்று வேகமாகப் பின்னால் நகர்ந்தது.

அதே சமயத்தில் ஆகாயத்தில் மேகங்கள் ஒன்றோடொன்று மோதிக் கண்ணைப் பறிக்கும் மின்னலுடன் பேரிடியை முழக்கின. உடனே சட்டென்று தன் பாம்புக் கரங்களனைத்தையும் உள்ளுக்கிழுத்துக் கொண்டு பின்னோக்கிச் செல்ல ஆரம்பித்தது அப் பசிபிக் பிசாசு. படகையும் அதன் பின்னாலேயே வேகமாய்விட்டான் கங்குங். அதற்குள் மழை வந்து விடவே, "திரும்பி விடுவோமே! புயலுக்கறிகுறியாய்ச் சுழற்காற்று கூட வீசுகிறதே!" என்று மன்றாடினான் மிங்கவாங்.

"அந்தப் பேச்சையே எடுக்காதே!" என்று 'சள்'ளென்று விழுந்தான் கங்குங். அதற்குள் அந்தக் கொடிய பிராணி அப்படியும் இப்படியும் போக்குக்காட்டி, மெதுவாக அந்தத் தீவின் ஒரு பக்கத்திலிருந்த ஒரு வளைகுடாவினுள் புகுந்து கொண்டு விட்டது. கங்குங் விடவில்லை. "இனி மேல் நீ என்னிடமிருந்து தப்ப முடியாது"





ஒருவர் (பஸ்ஸில் ஏறிக் கொண்டே கீழே நின்று கொண்டிருந்த தன் பிள்ளையைப் பார்த்து):—அடே, அம்பி! வீட்டுக்குப் போ. இதோ ஒரு நிமிஷத்திலே நானும் திரும்பி வந்து விடுவேன்!

கண்டக்டர்:—ஒரு நிமிஷம்கூட வேண்டாங்க. இதோ இப்போதே நீங்கள் இறங்கிவிட வேண்டியதுதான்! பஸ்ஸில் இடமில்லை!

என்று கத்திக் கொண்டே படகை வேகமாய்ச் செலுத்தி அந்த வளைகுடாவின் வாயிலை அடைந்துக் கொண்டான்.

மழையோ கொட்டுக் கொட்டென்று கொட்டிக் கொண்டிருந்தது. மிங்கவாங் அந்தப் படகினுள் எங்கேயோ புகுந்து கொண்டு விட்டான். ஆனால் கங்குங்கோ கொட்டும் மழையில் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டே அந்தக் கடற் பிசாசின் போக்கைக் கண் கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்தான். அது கரையை நோக்கி மெதுவாய்ச் செல்லச் செல்ல படகையும் சந்தடி செய்யாமல் அதன் பின்னாலேயே செலுத்தினான்.

மழை சற்று ஓய்ந்தது. மெதுவாய் வெளியே தலையை நீட்டினான் மிங்கவாங். படகின் விளிம்பில் நின்று கொண்டு, கங்குங் கண் அசைக்காமல் கரையோரத்தையே நோக்குவதைப் பார்த்தான். "ஆ! என்னே கல்நெஞ்சம் இவருக்கு!" என்று முணுமுணுத்துக் கொண்டே அவனும் கரையை உற்றுப் பார்த்தான்.

பாதி தரையிலும், பாதி நீரிலுமாக அந்தப் பிரும்மாண்டமான கடற்சிலந்தி அமர்ந்திருந்தது. அதன் பாம்புக் கரங்கள் நாற்புறமும் பாறைச் சுவர்களிலே போய்ச் சுருண்டு முடங்கிக் கிடந்தன. அதனுடலோ பெரிய டார்பிடோ மாதிரியிருந்தது. இந்த இரண்டு மூன்று தினங்களாக அதற்குக் கிடைத்த சட்டிக் குத்துகளின் புண்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாக அதனுடலில் தெரிந்தன. "இதன் கண்களைப் பாரேன்! இன்னும் நம்மையே தான் உற்றுப் பார்க்கிறது!" என்றான் மிங்கவாங். அவன் பற்கள் அப்பொழுது ஒன்றோடொன்று அடித்துக் கொண்டன. இவ்வழியாக வந்து இந்தக் கங்குங்கிடம் ஏன் மாட்டிக் கொண்டோம்! நாம் இந்தச் சிலந்தியின் பிடியில் சிக்கி உயிரை விட வேண்டியது தான் போலிருக்கிறது என்று எண்ணிய மிங்கவாங்குக்குத் தன் பெண்டாட்டி பிள்ளைகள் நினைவு வந்தன. நாம் இப்பிராணியிடம் சிக்கி இறந்துவிட்டால், 'நாம் இறந்துவிட்டோம்' என்று சொல்வதற்குக் கூட ஆள் இல்லையே! இப்படி நாதியற்றுப்போயா நான் சாக வேண்டும் என்று எண்ணிய அவன் கண்களை நீர் மறைத்தது. எனவே, தடுமாறிய குரலில், "வேண்டாம், இதை வேட்டையாட வேண்டாம். நாம் திரும்பி விடுவோம்" என்றான்.

"திரும்புவதா! கைக்கு எட்டியதை நழுவ விடுவதா! இனிமேல் என்னிடமிருந்து இது தப்ப முடியுமா!" என்று பெருமையாய்ச் சொல்லிக் கொண்டே தன் துப்பாக்கியை எடுத்தான் கங்குங். குறி தவறக் கூடாதல்லவா! துப்பாக்கியை நீட்டித் தன் பார்வையை மூன் மூலையில் வைத்தான். அவனையே பார்த்துக் கொண்டிருந்த மிங்கவாங், "நம் நாட்டு யுத்த தளபதியைப் போல் அல்லவா 'ஜம்'மென்று நிற்கிறீர்கள்!" என்றான்.

அந்த வார்த்தைகளைக் கேட்டதும், கங்குங்கின் மனநிலை சட்டென்று மாறியது. 'இத்தனை மாதக் கப்பல் பிரயாணத்தால் தேராத நம் உடம்பு, நீர்ச் சிலந்தியை வேட்டையாட ஆரம்பித்த இந்தச் சில நாட்களுக்குள் தேறி விட்டதே! அதற்குக் காரணமாயிருந்தது இந்த நீர்ச் சிலந்திதானே! பாவம்! இதை நாம் எதற்காகக் கொல்ல வேண்டும்! வேண்டாம்! இது நீடூழி வாழட்டும்' என்றெண்ணினான் அவன். சட்டென்று துப்பாக்கியைத் தூர எறிந்துவிட்டுத் தலையைச் சாய்த்துத் தன் உடம்பைப் பார்த்துக் கொண்டான். மார்பகம் பரந்து விரிந்திருந்தது. தோள்களும் திரண்டிருந்தன. நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே "திருப்பு, படகை!" என்றான். "ஏன்......" என்று தயங்கினான் மிங் கவாங்.

"திருப்பிவிடு, படகை!" என்றான் கங்குங். அவன் குரலில் கண்டிப்புத் தொனித்தது. உடனே கீழ்ப் படிந்தான் மிங்கவாங். படகைத் திருப்பி விட்டான். அந்தப் பிரும்மாண்டமான ராட்சதக் கடற் பிராணியைக் கண்ணுக்கெட்டிய தூரம் உற்றுப் பார்த்துக் கொண்டே வந்தான் கங்குங். அப்பொழுது, இத்தனை சீக்கிரத்தில் தன் உடம்பு தேறின சந்தோஷத்தினாலும், இந்தப் பிராணியை அநியாயமாக இப்படித் துன்புறுத்தினோமே என்ற அனுதாபத்தினாலும் அவனது நீண்ட கீற்றுக் கண்களில் இலேசாய்ப் பனி படர்ந்தது.

அதற்குள் மேகம் கலைந்து எங்கும் இளம் வெய்யில் பரவியது. அப்பொழுது கங்குங்கின் மஞ்சள் நிறக் கதுப்புக் கன்னங்களில் மெருகிட்டிருந்த இளம் ரோஜாவண்ணம், அம் மெல்லிய வெய்யிலில் பளபளத்துக் காட்டியது. கங்குங் கம்பீரமாய் எழுந்து நின்று தன் தாய்நாட்டுக் கீதத்தை வாய்விட்டு உரக்கப் பாடிக் கொண்டே சென்றான். படகு வேகமாய்த் தண்ணீரைக் கிழித்துக் கொண்டு சென்றது.

அதே சமயத்தில் இனிமேல் பிரயோசனமில்லை என்று கைவிடப்பட்ட தரிசோசதிமாவில் ஆங்காங்கு செழுமையாக புல் முளைக்க ஆரம்பித்தது.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 55. ஜானு சிர்ஷாசனம்

முதல் பாகத்தில் பதினேழாவது கட்டுரையில் பஸ்சிமோத்தானாசனத்தைப் பற்றி வந்திருக்கிறது. இந்த ஜானு சிர்ஷாசனமும் அந்த வகையைச் சேர்ந்ததே. ஆனால் அதைவிட இதில் சில அபூர்வ பலன்கள் அமைந்திருக்கின்றன. முதலில் இந்த ஆசனத்தைச் செய்யும் விதத்தை அறிந்து கொண்டால் பின்பு பலன்களைப் பற்றிச் சொல்லும்போது சுலபமாய்ப் புரியும்.

**செய்யும் விதம் :**—விரிப்பில் உட்காரவும். வலது காலை நீட்டி, இடது காலை மடக்கவும். இடது காலின் குதிக்கால் அடி வயிற்றிற்குக் கீழும், மர்ம ஸ்தானத்துக்கு மேலும் உள்ள பாகத்தில் படும்படி வைத்து, பாதம் துடையை அணைத்தாற்போல் வைத்துக் கொள்ளவும். சித்திரத்தைக் கவனியுங்கள். இரண்டு கைகளைத் தலைக்குமேல் நேராக நீட்டி, கைகளைக் கோத்துக் கொள்ளவும். மூச்சை நன்றாய் இழுத்துக் கொள்ளவும். பின் மூச்சை விட்டவாறே குனிந்து, வலது காலைச் சித்திரத்தில் உள்ளபடி, கைகளால் பிடித்துக் கொள்ளவும். பின்மூச்சை ஒருதரம் வாங்கிவிட்டுக் கொண்டே இன்னமும் குனிந்து முகத்தால் முழங்காலைத் தொடவும். இந்நிலையிலேயே ஏழு முதல் பத்து எண்ணும் வரைக்கும் இருக்கவும். இப்படியிருக்கும்போது மூச்சை அடக்கியும் வைத்திருக்கலாம். முடியா விட்டால் லேசாய் விடவும் வாங்கவும் செய்யலாம். பிறகு மூச்சை வாங்கிக் கொண்டே தலையை நிமிர்த்தி, கால் பிடிப்பிலிருந்து கைகளை விலக்கி, மறுபடியும் கைகளை நீட்டியவாறே தலைக்குமேல் நேராய்க் கொண்டு செல்லவும். பிறகு மீண்டும் முன் சொன்னாற்போல் செய்யவும். இவ்வாறு மூன்று முதல் ஆறு தடவைகள் வரை செய்யலாம்.

இம்மாதிரி வலது பக்கம் வேண்டிய தடவைகள் செய்துவிட்ட பின் இடது பக்கமும் அவ்வாறே வேண்டிய தடவைகள் செய்யவும். ஒவ்வொரு தடவைக்கும் குனியும்போது மூச்சை விடவும், நிமிரும்போது இழுக்கவும் வேண்டும். இந்த முறை எல்லா ஆசனங்களுக்கும் பொருந்தும்.

பஸ்சிமோத்தானாசனம் செய்ய வந்தவர்களுக்கு இந்த ஆசனம் செய்யச் சுலபமாய் வரும்; அதைச் சரியாய்ச் செய்ய வராதவர்களுக்கு இதையும் சரிவரச் செய்ய வராது. இந்த ஆசனத்தைப் பற்றி உட்டியாண, நௌலி கட்டுரைகள் வெளியான பின் இப்பொழுது வருவதால் உட்டியாண நௌலி செய்த பின்னர்தான் இதைச் செய்ய வேண்டும் என்பதில்லை. இந்த ஜானு சிர்ஷாசனத்தைப் பஸ்சிமோத்தானாசனம் செய்வதற்கு முன்பும் செய்யலாம். பஸ்சிமோத்தானாசனம் செய்த பின்பும் செய்யலாம்; அல்லது யோக முத்திரா செய்த பின்பும் இந்த ஆசனத்தைச் செய்யலாம்.

இந்த ஆசனம் செய்வதற்குச் சிலருக்கு முதலில் சரியாய் வராது. முதலில் ஒரு காலை நீட்டி, மற்றொரு காலின் குதிக்காலை அடி வயிற்றுக்கும், மர்ம ஸ்தானத்துக்கும் மத்தியில் வைத்துச் செய்ய வேண்டுமானால் சிரமமாய் இருக்கும். சிலருக்கு அம்மாதிரி முதலில் வைக்கவும் வராது. அப்பேர்ப்பட்டவர்கள், பாதத்தைச் சாதாரணமாய்த் துடையில் இடிக்கும்படி வைத்தும் செய்யலாம். பழகப் பழக நாளடைவில் சரியாய்ச் செய்ய வரும். சிலருக்கு அப்படி வைத்தாலும் கைகளால் காலை எட்டிப் பிடிக்க வராது. முதுகெலும்பின் முற்றலே இதற்குக் காரணம். இதைச் சரிவர எப்படியும் செய்ய வேண்டும் என்று வைராக்கியத்தைக் கைக்கொண்டு நாளுக்கு நாள் முயற்சியுடன் பழகி வந்தால், சில நாட்களில் முதுகெலும்பின் பிடிப்பு விட்டு, சிறிது சிறிதாக வளைக்க முடியும். சிலருக்கு ஒரு கையால் பாதத்தைத் தொட வரும். இரண்டு கைகளாலும் தொட வராது. சிலருக்கு விரல் மட்டும் தொடும். இப்பேர்ப்பட்டவர்களால் பாதத்தையே சித்திரத்தில் உள்ளபடி வளைத்துப் பிடிக்க வேண்டுமானால் முடியாது; அப்பேர்ப்பட்டவர்கள் முயற்சியுடன் செய்து வந்தால் சில நாட்களிலேயே பாதத்தைச் சித்திரத்திலுள்ளபடி பிடிக்க வந்து விடும். சிலருக்கு அப்படிப் பிடிக்க வந்தாலும், முகம் முழங்காலைத் தொடாது. குனிய முடியாது. வயிறும் துடையும் பருத்தவர்களால் மட்டும் இப்படிக் குனிய முடியாது என்பதில்லை; வயிறே யில்லாமல் ஒல்லியாய் இருப்பவர்களில் சிலராலும் இப்படிக் குனிய முடிவதில்லை. இவர்களுக்கு முதுகெலும்பு கட்டைபோல் கெட்டியாய் விட்டிருப்பதே காரணமாகும். இவர்களும் விடா முயற்சியுடன் பழகி வந்தால் சில நாட்களில் சரியாய்ச் செய்ய வரும். வயிறு பருத்துத் துடை பருத்தவர்கள் சலபாசனம், தனுராசனம், பஸ்சிமோத்தானாசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம் போன்றவைகளைச் செய்து வந்தால் வயிறு, துடை இளகி நன்கு குனிய வரும்.



ஜானு சிர்ஷாசனம்



"ஏன் ஒரு மாதிரி கவலையோடு உட்கார்ந்திருக்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லை. நேற்றைக்கு என் தம்பி, சதா தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்த பூனையைப் பிடித்துக் கொண்டுபோய் எங்கேயாகிலும் விட்டு விட்டு வருகிறேன் என்று சொல்லிவிட்டு அதைக் காரில் பிடித்துப் போட்டுக் கொண்டு போனான். அவன் இன்னும் திரும்பி வரவில்லை......!"

"எங்கே போகப்போகிறான்? வந்துவிடுவான். அதற்காக கவலைப் படுவானேன்?"

"......இல்லை. அதற்காகக் கவலைப்படவில்லை. அந்தப் பாழாய்ப் போன பூனை திரும்பி வந்து விட்டது!"

இந்த ஆசனத்தை ஒரு பக்கம் செய்து மறு பக்கம் செய்ய வேண்டும். சிலர் வலது பக்கம் ஒரு தடவை, இடது பக்கம் ஒரு தடவை, மறுபடி வலது பக்கம் ஒரு தடவை, இடது பக்கம் ஒரு தடவை என்று மாறி மாறிச் செய்வார்கள். அப்படிச் செய்ய வேண்டிய அவசியமில்லை. ஒரே பக்கத்தில் அவர்களுக்கு வேண்டிய அளவு அதாவது மூன்று முதல் ஆறு தடவைகள் வரை செய்து விட்டு மறு பக்கம் செய்யலாம்.

சிலருக்கு இந்த ஆசனத்தில் குனியும்போது தொடை நரம்புகள் இழுத்து வலிக்கும். முதுகு தொடை இவைகள் வலிக்கும். இவைகளெல்லாம் செய்யச் செய்யத்தான் மறையும். சிலருக்கு முழங்கால் தூக்கிக் கொள்ளும். முதலில் அப்படியே தூக்கிக் கொண்டாலும் பரவாயில்லை. ஆனால் சரியான நிலையை மனத்தில் இறுத்தி, சிறிது சிறிதாக முன்னேற வேண்டும். சிலர் இன்றே சித்திரத்தில் உள்ளபடி செய்துவிட வேண்டும் என்று தீவிரமாய்ப் பழகிப் பின் வலிக்கிறது என்று விட்டு விடுவார்கள். அப்படி விட்டு விடாமல் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேற வேண்டும். பூரணமாய்ச் செய்ய வந்த பின்தான் பலன் ஏற்படும் என்று இருந்தால் அவசரப்படலாம். ஆனால் "ஒவ்வொரு சிறு முயற்சிக்கும் முன்னேற்றப் பாதையில் முன்னேறுகிறோம். சிறிது பலன் கிடைத்துக் கொண்டே போகிறது" என்று தெரியும் போது வீணாக அவசரப்படுவானேன்!

இந்தமாதிரி யெல்லாம் சமாதானம் செய்து ஆறுதல் சொல்லி, ஆசனங்களைச் செய்ய ஆர்வத்தை உண்டாக்கினால் சிலர் வேறு மாதிரியும் நினைக்கின்றனர். "வெறுமனே யிருக்கும் உடலையும், கைகளையும், கால்களையும் வளைப்பானேன்! தலை கீழாக நிற்பானேன்! நமக்கு இந்த உடல் என்னமோ இருக்கிறது. ஏதேதோ அவரவர்களுக்கு ஏற்பட்ட வேலை செய்கிறோம். வேண்டியதைக் கிடைத்தவாறு உண்ணுகிறோம்; உறங்குகிறோம். நாட்கள் சென்று கொண்டே யிருக்கின்றன. அப்படி யிருக்க வெறுமனே இருக்கும் உடலை வளைத்து வாட்டுவானேன்! அதற்கு என்ன அவசியம் வந்து விட்டது!"

இந்த நினைப்புதான் இன்று பல பேரிடை நிலவி வருகின்றது. இது உடல் ஞானம், உலக ஞானம், அநுபவ ஞானம் இல்லாதவர்களின் கூற்று. இவர்கள் நினைப்பதுபோல் எல்லாமே தன்னிச்சையாய்ச் சரிவர நடந்து கொண்டு போகிறது என்றால் உலகத்தில் இத்தனை விதமான பிணிகள் ஏன்! இத்தனை மருந்துகள் ஏன்! இத்தனை டாக்டர்கள் ஏன்! இத்தனை ஆஸ்பத்திரிகள் ஏன்! சரி. இவைகள் எல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். மனிதன் ஆயுள் நூறு என்று இருக்க ஏன் சீக்கிரமாய்க் கடையைக் கட்டுகிறார்! இவர்கள் இப்பொழுது ஏதோ சில நாட்களாக நோய்களின்றிச் சுகமாக யிருக்கலாம். இனி நோய்களே வராமல் இருக்கும் என்பது என்ன நிச்சயம்! அல்லது இதே நிலைமையில் இவர்கள் எதிர்காலம் இருக்கும் என்றுதான் சொல்ல முடியுமா! நோய்களைப் பார்த்து என்னிடம் வரக்கூடாது என்று தடை உத்தரவுதான் போட முடியுமா!

நாம் இந்த உலகத்தில் தனித்து வாழுகிறோமா! வாழத்தான் முடியுமா! சமூகத்தோடு சேர்ந்து தானே வாழவேண்டும். அப்படி வாழும்போது கூட்டங்களிடையே தான் குடியிருக்கிறோம். கூட்டங்களிடையே தான் பழகுகிறோம். கூட்டங்களிடையேதான் வாழுகிறோம். அப்படிப் பழகும் போது நாம் உபயோகிக்கும் ஜலம், காற்று முதலியவைகள் அசுத்தமாகின்றன. அந்த ஜலமும் காற்றுமே போதும் வியாதிகளை யுண்டாக்க. இவைகளிலிருந்தெல்லாம் நாம் தப்பித்து ஆரோக்கியமாய் வாழ வேண்டுமானால் நமது உடல் உறுதியாய் இருந்தால்தான் முடியும். நோய்கள் பதுங்கி யிருந்து தாக்கும் ஐந்தாம் படையைப் போல் எப்பொழுது என்று அதன் பேய் வாயைத் திறந்து காத்திருக்கும். மனித உடல் ஒரே தன்மையாய் என்றும் இருக்காது. பல காரணங்களால் பலஹீனம் கொள்ளச் செய்யும்; மாறுதல் அடையும். அப்பொழுது பலவித கோளாறுகள், நோய்கள் அணுகும். அவ்வாறு நேராமல் இருக்கவே யோக ஆசனங்கள் பாதுகாப்பு அளிக்கின்றன. யோக ஆசனங்கள் எனும் கவசம் அணிந்தவர்களுக்கு நோய்களைப் பற்றிய கவலையே கிடையாது. என்றும், எப்பொழுதும் சமூக மக்களுடன் சேர்ந்து சுகமாய், ஆனந்தமாய் வாழலாம்.

பலன்: ஜானு சிர்ஷாசனம் செய்வதால் தாது பலம் ஏற்படும். மூத்திரக் கடுப்பு, எரிச்சல், மூத்திரத் தடை, பிரமேகம், வெகுநாளா யிருந்து கொண்டிருக்கும் ஜுரங்கள், வயிற்று உப்பிசம், அஜீரணம், மலச்சிக்கல், தலைபாரம், கண்ணெரிச்சல், பலஹீனம், அருசி, வெட்டை, களைப்பு, சந்துவாதம் முதலியன போகும். பெண்களுக்குண்டாகும் சகல கர்ப்பப் பை சம்பந்தமான வியாதிகளும் விலகும்; சுகப் பிரவசு மேற்படும். வீட்டு விலக்கு சம்பந்தமான தீராத கோளாறுகள் எல்லாம் தீர்ந்து போகும்.

குறிப்பு: இந்த ஆசனத்தை வயிற்றில் ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள் செய்யக்கூடாது. வழக்கமாய்ச் செய்யும் பெண்கள் கர்ப்பங் கொண்டால் இரண்டு மாதம் வரை செய்யலாம். பின் செய்யக்கூடாது. கர்ப்பமானவர்கள் புதிதாய் இந்த ஆசனத்தை ஆரம்பிக்கக்கூடாது. (தொடரும்)

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

- ஏற்கெனவே முதல் தடவையாக அகில உலகச் சிறுகதைப் போட்டி நடந்தது அல்லவா! அதில் இந்தியா உள்பட உலகத்தில் உள்ள இருபத்து மூன்று நாடுகள் கலந்து கொண்டன.
- அந்தப் போட்டியில் உலகத்திலேயே முதல், இரண்டாவது பரிசு பெற்ற கதைகள் "கல்கி"யில் தொடர்ச்சியாக வெளியாகி வந்தது வாசக நேயர்கள் அறிந்த விஷயம். அவற்றைத் தவிர அந்தந்த நாடுகளில், அந்தந்த பாஷைகளில் பரிசு பெற்ற சுமார் நூறு சிறந்த கதைகளும் மொழி பெயர்க்கப்பட்டு, "கல்கி"யில் பிரசுரமாயின.
- மேற்படி போட்டி மிகவும் வெற்றிகரமாக நடந்ததால், இப்போது இரண்டாவது தடவையாக, அகில உலகச் சிறுகதைப் போட்டி நடத்த உத்தேசித்திருக்கிறார்கள்.
- இம்முறையும் அமெரிக்காவில் உள்ள பிரபல நியூ யார்க் ஹெரால்டு டிரிப்யூன் பத்திரிகையின் மேற் பார்வையிலேயே அந்தப் போட்டி நடைபெறுகிறது.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறுகதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புது டில்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவில் உள்ள முக்கியமான பன்னிரண்டு பாஷைகளிலாவது, ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. எனவே, தமிழ் எழுத்தாளர்கள் அகில உலகச் சிறுகதைப் போட்டியில் கலந்து கொள்ளலாம்.
- இந்தியாவில் எழுதப்படும் சிறந்த எட்டுக் கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கும். அதில் முதல் பரிசு ரூ. 1500.
- அந்த எட்டுக் கதைகளிலிருந்து அகில உலகப் போட்டிக்கு முதல் நாலு கதைகள் அனுப்பப்படும்.
- இதில் கலந்து கொள்ளும் பத்திரிகைகள் தங்கள் தங்கள் பாஷைக் கதைகளுக்குப் பரிசு அளிக்கும். பரிசு பெறும் சகல கதைகளும் போட்டியை நடத்தும் பத்திரிகைகளில் வெளிவரும்.
- கதைகள் பிரசுரமாகி முடிந்த பின், அந்தக் கதைகளில் எது சிறந்தது என்பதை, போட்டியை நடத்தும் பத்திரிகைகளிடையே வோட்டு எடுத்து முடிவு செய்வார்கள்.
- அந்தக் கதைக்கே அகில உலகப் போட்டியின் முதல் பரிசான ஐயாயிரம் டாலர் (ரூ. 23,750) கொடுக்கப்படும்.
- பஞ்சாயத்தார்களிடம் சமர்ப்பிக்கும் கதைகளுக்கு இலக்கங்களே கொடுக்கப்படுமாதலால், எழுத்தாளர்கள் தங்கள் பெயரையோ, விலாசத்தையோ அதில் குறிப்பிடக் கூடாது.
- எனவே ஒவ்வொருவரும் தாங்கள் எழுதும் கதையில் இரண்டு பிரதிகள் அனுப்ப வேண்டும். அவற்றில் பெயரோ, விலாசமோ குறிப்பிடாமல் ஒரு பிரதி இருக்க வேண்டும்.
- அடுத்த ஜூன் மாதம் முப்பதாம் தேதிக்குள் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்ப வேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- தமிழ்க் கதைகளை ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும்.
- அனுப்பப்படும் சிறுகதைகள் அதிகபட்சம் நாலாயிரம் வார்த்தைகளுக்குமேல் இருக்கக் கூடாது. குறைந்தபட்சம் ஆயிரத்து இருநூற்றைம்பது வார்த்தைகள் உள்ளதாக இருக்க வேண்டும்.
- சிறுகதை அனுப்புவோர் தங்களுடைய சொந்தக் கற்பனையைக் கொண்டு எழுதப்பட்டது என்று உறுதி கூறவேண்டும். ஏற்கெனவே எந்த இடத்திலும் பிரசுரிக்கப்பட்டதல்ல என்று உத்தரவாதம் அளிக்க வேண்டும்.
- ஒரே ஆசிரியர் ஒன்றுக்கு மேற்பட்ட கதைகள் அனுப்பலாம்.
- கதைகள் எவ்விஷயத்தை வேண்டுமாயினும் அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். காதல், குரோதம், நன்றி, வாஞ்சை, தேசபக்தி, தியாகம், லோபம், யுத்தம், துணிகரச் செய்கை, வீரப் போர், துரோகம், கல்யாணம், மரணம் ஆகிய எந்த விஷயமாயினும் சரி; உணர்ச்சிப் பெருக்கு, அமைப்புத் திறன், வாழ்க்கைப் பண்பு, நடையின் சிறப்பு, கதையின் ஓட்டம்—ஆகிய சிறு கதையின் அம்சங்களே முக்கியமாகக் கருதப்படும்.
- அகில உலகச் சிறுகதைப் போட்டிக்குப் பொறுக்கி எடுக்கப்படும் நாலு தமிழ்க் கதைகள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 125 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- முதலாவது அகில உலகச் சிறு கதைப் போட்டியில் இரண்டாவது பரிசு பெற்றவர் இந்தியர்தான்.
- இம்முறை மற்ற நாட்டினரைப்போல் இந்தியரும் முதற் பரிசு பெறுவதற்குச் சந்தர்ப்பம் இருக்கிறது. அவ்விதம் பரிசு பெற்று, உலகப் புகழை அடைவது இந்திய எழுத்தாளர்களின் பெரு முயற்சியையே பொறுத்திருக்கிறது.
- தயவு செய்து உறையின்மேல் "**அகில உலகச் சிறுகதைப் போட்டி**" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- அகில இந்தியப் போட்டிக்காகப் பஞ்சாயத்தார் தேர்ந்தெடுக்கும் நாலு கதைகளையும் அவற்றின் ஆசிரியர்கள் தாங்களாகவோ, அல்லது பிறரைக் கொண்டோ ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தர வேண்டும்.
- பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியானவை "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அவற்றிற்குரிய சன்மானமும் அளிக்கப்படும்.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" நிர்வாக ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.



# வேலைக்கார ரங்கன்

ஹர்ஷன்

என் சாண் உடம்பையும் அரைச் சாணாக ஆக்கிக் கொண்டு கூனிக் குறுகிய வண்ணம் நின்று கொண்டிருந்தான் ரங்கன்.

துள்ளிக் குதித்தார் சபாபதி முதலியார். "டேய்! போடா என்றால் போகாமல் சண்டித்தனம் செய்கிறாயா? சின்னப் பிள்ளையிலிருந்து வளர்த்ததற்கு நல்ல பிரதி உபகாரம் செய்து விட்டாய்! இன்றைக்கு இதைச் செய்கிறவன் நாளைக்கு இன்னும் என்னதான் செய்ய மாட்டாய்?"

"நான் என் பங்கைக் கேட்கவில்லையே! நான் அதைக் கண்டெடுத்த போது என்னோடு கோடிவீட்டுச் சுப்பனும் இருந்தான். அவனுக்குப் பாதி பங்கு தருவதாக ஒப்புக் கொண்டு விட்டேன். தயவு செய்து அந்தப் பங்கை மட்டும் தந்து விடுங்கள், போதும்" என்றான் ரங்கன்.

"சோறே கிடையாதென்றால் நல்ல இலையாகப் போடுங்கள் என்றானாம். ஏதோ ரூபாய்களைக் கண்டெடுத்ததாக கனவு கண்டுவிட்டு உளறுகிறாயே. எவன்டா ரோட்டில் ரூபாய்

இருக்காது. கூடவே, அனாதைப் பையன் ஒருவனைத் தான் காப்பாற்றுவதாகப் பெயரும் கிடைத்துவிடும் என்ற நோக்கம் அவருக்கு. இந்த அழைப்பின் பேரில் வீட்டுக்கு வந்த ரங்கனை முதலியாரின் மனைவிக்குப் பிடிக்கவில்லை. என்றாலும்



காண்ஸ்டபிள் (கூட்டத்தில் பெற்றோரை விட்டுப் பிரிந்த பையனைப் பார்த்து):— தம்பி! உன் அப்பா பெயர் என்ன? உன் வீடு எங்கே இருக்கிறது?

பையன்:—எனக்குத் தெரியாது! அப்பா வைத்தான் கேட்கணும்!

காண்ஸ்டபிள்:—சரி. உன்னுடைய பெயர் தெரியுமா? போலீஸ் ஸ்டேஷனிலே சொல்லி விடுகிறேன். உன் அப்பா உன்னைத் தேடிக் கொண்டு வந்தால், உன்னை அவரிடம் ஒப்புவிப்பதற்குச் சௌகரியமாயிருக்கும்.

பையன்:—என் பெயர் அப்பாவுக்கு நன்றாய்த் தெரியுமே!

வருவான். ஆகவே, அவன் வரும் வேளையை எதிர்பார்த்து ஒவ்வொரு குழந்தையும் தெருவில் காத்துக் கொண்டிருக்கும்.

அவன் முதலியாரின் வீட்டுக்கு வந்து பதினைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. அவன் அங்கு வந்த போது அவனுக்கு வயது பத்து. இப்போது, அவன் கட்டிளங் காளையாய், வனப்பு கொண்ட உடலோடு விளங்கினான். முதலில் எல்லாம் அவன் தனியாகத் தான் அவ்வளவு தூரமும் போய்த் திரும்புவான். கோடி வீட்டில் இருந்த ஒரு பணக்காரர் தாமும் சந்தையிலேயே சாமான்களை வாங்க வேண்டும் என்று விரும்பி, அவர்கள் வீட்டு வேலையாள் சுப்பனையும் அவனோடு கூடத் துணையாக அனுப்பத் துவங்கினார்.

அன்றைக்கு ஞாயிற்றுக் கிழமை. வழக்கம் போலவே, இரண்டு மணிக்கெல்லாம், சுப்பனோடுகூட சந்தை கூடும் இடத்துக்குச் செல்லப் புறப்பட்டான் ரங்கன். முறைப்படி அங்கு வாங்க வேண்டிய சாமான்களை எல்லாம் வாங்கிப் பிறகு வீட்டுக்குச் செல்வதற்காக அந்தப் பாதையினூடே நடந்தனர்.

நடுவழியில் ஒரு சுமை தாங்கி யிருந்தது. அழுத்தும் பாரத்தை அங்கே கொஞ்ச நேரம் இறக்கி வைத்துவிட்டுச் சிரமபரிகாரம் செய்து கொண்டார்கள்.

திடீரென்று ரங்கன் பாதை ஓரத்தில் எதையோ பார்த்துவிட்டு "டேய், சுப்பா அதைப் பாருடா? ஸிகிரெட் டப்பா போல வெய்யிலில் பள பளன்னு கிடக்கு. யாரோ கை தவறுதலாக விட்டு விட்டாங்க போல இருக்கு" என்று கத்தினான்.

அரை நொடியில் சுப்பன் அந்த டின்னை எடுத்து வந்தான். அதை இரண்டு பேருமாகத் திறந்து பார்த்தனர். வானவில்லின் மற்றொரு தோற்றமே போல பல வர்ணங்களில் காகிதங்கள் அடைக்கப்பட்டிருந்தன. கையை விட்டு அவ்வளவையும் வெளியே இழுத்துப் போட்டான் சுப்பன்.

ஆச்சர்யம் கலந்தகுரலில் வீறிட்டலறினான் ரங்கன். "டேய் அப்பா! அவ்வளவும் நூறு ரூபாய் நோட்டுகள். பாவம், யாருடைய சொத்தோ? யாருடைய வயிறு எரிகிறதோ?"

சுப்பன் அவைகளை எண்ணிப் பார்த்தான். சரியாக ஐம்பது நோட்டுகள் இருந்தன. கண்களை அகல விரித்தான் அவன். "ரங்கா! முழுசாக ஐயாயிரம் ரூபாய்கள்" என்றான்.

"நீ இங்கேயே இந்த சாமான்களைப் பார்த்துக் கொண்டு தங்கி இரு. நான் இந்தப் பணத்தைப் போலீஸ் ஸ்டேஷனில் கொடுத்து விட்டு வருகிறேன். அவர்கள் சொந்தக்காரர்களைத் தேடிக் கண்டு பிடித்துக் கொடுத்து விடுவார்கள்" என்றான் ரங்கன்.

சுப்பனுக்கு இந்த ஏற்பாட்டில் சம்மதம் இல்லை. அவன் இந்த யோசனையை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டான்.

வெகுநேர யோசனைக்குப் பிறகு அந்தப் பணத்தை சுப்பன் எஜமானர் பார்த்தால் பிடுங்கிக் கொண்டு விடுவார் என்ற காரணத்தால் அதை ரங்கனே வைத்து வைக்க வேண்டியது. மறு நாள் இரண்டு பேரும் ஆளுக்குப் பாதியாகப் பகிர்ந்து கொள்வது என்ற முடிவுக்கு வந்தனர்.

அன்றைக்கு வீடு திரும்பியபோது அரை மணி நேரம் தாமதமாகி விட்ட காரணத்தால் குழந்தைகள் எல்லாம் ரங்கன் கொண்டு வரும் தின்பண்டங்களுக்காக அவன் வரவை எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தன. அவன் வந்ததும், வராததுமாய், அவன் சாமான்களை இறக்கி வைக்கும்வரை காத்துக் கொண்டிருக்கக் கூடப் பொறுமை இன்றிக் குழந்தைகள் அவன் மடியைப் பிடித்து இழுத்தன.

ரங்கன் இந்த இக்கட்டான நிலைமையைச் சமாளிப்பதற்குள் அந்த நடக்கக் கூடாத காரியம் நடந்து விட்டது. அவன் மடியில் இருந்த டப்பி சிதறி உருண்ட வேகத்தில் மூடி திறந்து நோட்டுக் கத்தை ஒரு மூலையில் கேட்பாரில்லாமல் விழுந்தது.

சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டிருந்த முதலியார் துள்ளிக் குதித்து ஓடினார். இதற்குள் அவர் மனைவி வாயிற்புறக் கதவை இறுகச் சாத்தி விட்டாள்.

ரங்கன் அவனாகவே நடு ரோட்டில் அதைக் கண்டெடுத்த விதத்தையும், எடுத்தபோது சுப்பனும் கூடவே இருந்ததையும், சொன்னான். ரூபாய்களை எண்ணிப் பார்த்து அவைகளைப் பத்திரமாக எடுத்து வைத்த முதலி

யார் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு "என்னடா, ரங்கா? ஏன் நிற்கிறாய்? வேலையைக் கவனி, போ!" என்றார்.

அன்றைய இரவு நான்கு உயிர்களுக்கு நித்திரையற்ற இரவாகக் கழிந்தது. முதலியாரும் அவர் மனைவியும் அவர்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பொருளாக நினைத்துக் கொண்டு அதை எந்த எந்த வழிகளில் உருப்படியாகச் செலவழிக்கலாம் என்ற யோசனையிலேயே அன்றைய இரவைக் கழித்தனர். ரங்கனும், சுப்பனும் அதைக் கண்டெடுத்த உவகையில் தூங்காமல் கழித்தனர்.

முதலியாரிடம் அவர் மனைவி சொன்னாள்: "முதலில் இந்தப் பயலை வீட்டை விட்டுத் துரத்தி விடுங்கள். இல்லாவிட்டால் கண்டவரிடம் தான் அந்தப் பணத்தைத் தேடி எடுத்ததாகவும் நாம் அபகரித்துக் கொண்டு விட்டதாகவும் சொல்வான். போலீஸ், பொறுமை என்று பல சங்கடங்களும் வரும்......"

முதலில் முதலியாருக்கு மனைவியின் இந்த யோசனை பிடிக்கவில்லை. ஆனால், பொழுது புலர்வதற்குள் அவரைத் தன் விருப்பத்துக்கு இணங்க வைத்து விட்டாள் அவள்.

மறுநாள் காலை. ரங்கன் சுப்பனுக்கு நியாயமாகச் சேர வேண்டிய பணத்தை யாவது தந்து விடும்படியும் தன் பங்கை முதலியாரே வைத்துக் கொள்ளட்டும் என்று மன்றாடியபோதும்கூட முதலியார் கொஞ்சமும் இரக்கம் காட்டவில்லை.

★

முதலியாரின் வீட்டை விட்டு வெளியேறிய ரங்கனுக்குத் தான் எப்படிப் பிழைப்பதென்று குழப்பமாக இருந்தது. எதை எதையோ யோசித்து மனத்தைக் குழப்பிக் கொண்டபோது அவனுக்குத் திடீரென்று சந்தையில் பலசரக்குச் சாமான்கள் விற்கும் செட்டியார் நினைவு வந்தது.

ஒவ்வொரு தரம் சந்தைக்குப் போகும் போதும் அவன் செட்டியாரைப் பார்ப்பான். செட்டியாருக்கு ஏனோ அவனிடம் ஒருவித நாட்டம் ஏற்பட்டிருந்தது. அவனுடைய சுறுசுறுப்பையும், சலிப்பில்லாத உழைப்பையும் கண்ட செட்டியார் அவனைத் தன்னிடம் வேலைக்கு வைத்துக் கொள்ள ஆசைப்பட்டார். ஒரு தரம் அவர் வாய் விட்டு அவனையே கேட்கக்கூடக் கேட்டார்.

"ஏனப்பா; முதலியாரிடம் நீ மாடாக உழைக்கிறாய். ஆனால், சாப்பாட்டைத் தவிர உனக்குச் சல்லிக் காசாவது சம்பளமாகத் தருகிறாரா? இதோ பார் அந்த வேலையை விட்டு விடு. என்னிடம் வா. இரவும் பகலும் வேலை இருக்காது. நாளுக்கு எட்டு அல்லது பத்து மணி நேரம் வேலைதான். மாதா மாதம் சாப்பாடும் போட்டு இருபது ரூபாய் சம்பளமாகவும் தருகிறேன்" என்றார் அவர்.

பிடிவாதமாக ரங்கன் மறுத்தான். "சின்ன வயதிலிருந்து முதலியார் என்னை வளர்த்தார். நான் வளர்ந்து ஆளாகி விட்டேன் என்ற காரணத்துக்காக நான் அவரை விட முடியாது" என்று சொல்லி விட்டான்.

அப்போதெல்லாம் செட்டியார் இவனைப் பரிகாசமாகப் பார்ப்பார்.

இப்போது அந்தச் செட்டியாரைக் கண்டான் ரங்கன். அவரிடம் நடந்த விவரம் எதையும் சொல்லவில்லை. 'என்னவோ இங்கே வந்துவிட வேண்டும் என்று தோன்றிற்று. வந்தேன். இனி இங்கேயேதான் இருப்பேன்' என்று சொன்னான் அவன்.

செட்டியாருக்கு ரொம்பவும் சந்தோஷம். முதலியாரின் வீட்டை விட்டு விட்ட காரணத்தால் ரங்கனுக்கு ஏக்கமாக இருந்ததே தவிர செட்டியாருக்குச் செய்ய வேண்டிய வேலைகளில் அவன் ஒரு போதும் கவனக் குறைவாக நடந்து கொள்ளவில்லை.

★

ரங்கன் வீட்டை 'விட்டுப் போனதும் முதலியாரும், அவர் மனைவியும் புதிதாகக் கிடைத்த பணத்தை எப்படிச் செலவிடுவது என்பதைப் பற்றி இன்னும் தீவிரமாகச் சிந்தனை செய்ய ஆரம்பித்தனர். கடனுக்காக அடமானமாக வைக்கப்பட்டிருக்கும் நிலத்தை மீட்டுக் கொள்வது, நல்லது என்றார் முதலியார். அதைப் பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். முதலில் தனக்கு ஒரு வைர நெக்லஸ் வேண்டும் என்றாள் அவர் மனைவி.



மானேஜர்: ஒரு நாழிகையாக நான் சொல்லிக் கொண்டு வந்ததை எழுதிக்கச் சொன்னால், 'அன்புள்ள ஐயா' வென்று போட்டு விட்டுக் கடைசியில் 'இப்படிக்குத் தங்கள்' என்று போட்டிருக்கிறீர்! மத்தியில் ஏன் ஐயா காலியாக விட்டீர்?

குமாஸ்தா: நீங்கள் அசோகா பாக்கு வெற்றிலை போட்டுக் கொண்டு ரொம்ப ராயமாக சொல்லிக்கொண்டே போனது எனக்கு ஒன்றும் புரியவில்லை!

கடைசியாக, அந்தப் பணத்தைக் கொண்டு நல்லதாக ஒரு வியாபாரம் செய்ய வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார் முதலியார்.

பணம் தொலைத்தவர்கள் ஒருவேளை எச்சரிக்கையோடு தேடிக் கொண்டிருந்தாலும் இருக்கலாம் என்ற அச்சமும் கூடவே அவருக்கு ஏற்பட்டது. மிச்சமிருக்கும் மனைவியின் நகைகளையும், நிலத்தையும் அடமானமாக வைத்துக் கடன் வாங்கினார் அவர். அப்பணத்தைக் கொண்டு வியாபாரம் செய்வது, கிடைத்த ரூபாய்களை வியாபாரத்தில் வந்ததாகச் சொல்லிக் கொள்வது என்று திட்டம் போட்டிருந்தார்.

எல்லாம் திட்டப்படியே நன்றாகத்தான் நடந்தது. வெகு விரைவில் கடன்களை அடைத்து விடலாம் என்ற எண்ணத்தோடு, வீடு, மனை, மனைவியின் நகைகள் எல்லாவற்றையும் அடகு வைத்தார். ஆனால் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்காமல் கிடைத்த பணம் வீட்டில் இருந்த காரணத்தாலோ என்னவோ அவருடைய வியாபாரம் துலங்கவே இல்லை.

இந்த நிலைமையில் முதலியார் வீட்டில் வைத்திருந்த ஐயாயிரம் ரூபாய்களை வெளியில் எடுத்தார். தனக்குக் கடன் கொடுத்த பாங்கியை நாடி வேகமாக நடந்தார்.

பாங்கியின் சிப்பந்தி முதலியார் தந்த நோட்டுகளைக் கையில் வாங்கிப் புரட்டிப் புரட்டிப் பார்த்துவிட்டு உதட்டைப் பிதுக்கினார். "சார் இவைகள் எல்லாம் செல்லாத நோட்டுகள். எதுவும் செல்லாது" என்று சொல்லி விட்டார்.

முதலியாருக்குத் தூக்கி வாரிப் போட்டது. "என்னது செல்லாத நோட்டா? என்ன சொல்கிறீர்கள்?" என்று அலறினார் அவர்.

சிப்பந்தி பொறுமையாகவே பதில் சொன்னார். "ஆமாம் சார்! இதெல்லாம் செல்லாத நோட்டுக்கள்தான்" என்றார்.

அண்ட சராசரங்களும் முதலியாரின் கண்களுக்கு முன் சுற்றிச் சுழன்றது. அவைகளுக்கு நடுவே ரங்கனின் கள்ளம் கபடமற்ற முகம் அவரைப் பார்த்துப் பரிகாசம் செய்வதைப் போல இருந்தது.

அவராக வீட்டுக்கு வந்தாரா? மூர்ச்சையாகி விழுந்த அவரைத் தூக்கிக் கொண்டு வந்தார்களா? என்று அவருக்குத் தெரியாது.

★

படுக்கையில் புரளக்கூட சக்தியில்லாமல் மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கப் படுத்துக் கொண்டிருந்தார் முதலியார். "ரங்கா, நான் பாவி. உன்னை ஆதி முதலே வஞ்சித்தேன். கடைசியில் உன்னை அடியோடு ஏமாற்றப் பார்த்தபோது அது என்னையே பலி கொள்ளப் பார்க்கிறது. நான் சாவதற்குள் நீ ஒரு முறை வந்து பார்த்து என்னை மன்னித்ததாகச் சொல்ல மாட்டாயா?" என்று வாய்க்கு வாய் பிதற்றி வந்தார் அவர்.

விஷயம் இதுதான். கொஞ்ச நாட்களாகவே பாரிச வாயுவால் பீடிக்கப்பட்டிருந்தார் முதலியார். எதிர்பாராத விதமாக இந்த இடையூறும் ஏற்பட்டு, அவரைத் தலையெடுக்க வொட்டாமல் அடித்துவிடவே அவர் படுத்த படுக்கையாகி விட்டார்.

நாட்கள் மறைந்தன. இன்று அவர் ஓட்டாண்டி. வீடும், நிலமும் ஒவ்வொன்றும் ஜப்தி செய்யப்பட்டு விட்டன. அவரும் அவர் மனைவியும் குழந்தைகளும்தான் பாக்கி. பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பதற்கேற்ப அவருக்கு வைத்தியம் செய்யக்கூட இன்றைக்கு நாதி இருக்கவில்லை.

அன்றைக்கு முதலியாரின் நிலை ரொம்பவும் மோசமாகி விட்டிருந்தது.

★

மாலை வேளை. சூரியன் மெள்ள மறைந்து கொண்டிருந்தான். முதலியாரின் உலக வாழ்க்கையும் அஸ்தமித்து விடுமோ என்று அவர் மனைவி கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள்.

திடீரென்று ரங்கன் அங்கே தோன்றினான். "நான் பாவியாகவே இருக்கலாம். என்னை வளர்த்த தோஷத்துக்காகவாவது முதலியாரின் உடல் நிலைமையைப் பற்றி எனக்குச் சொல்லி அனுப்பக் கூடாதா? அகஸ்மாத்தாக சுப்பனை நேற்று சந்தையில் சந்தித்தேன். இல்லாவிட்டால் இப்போது பார்க்கக்கூடக் கொடுத்து வைத்திருக்க மாட்டேன்" என்று அலறினான் அவன்.

முதலியார் மனைவியின் கண்களில் நீர் துளிர்த்தது. "நீயல்ல பாவி. நானும் அவரும் தான் பாவிகள். அதன் பலன் இதோ, வைத்திய உதவிக்குக் கூடப் பணம் இல்லாமல் தவிக்கிறோம்" என்றாள்.

ரங்கன் விம்மி விம்மி அழுதான். "தெய்வத்தின் புண்ணியத்தில் சென்ற ஒரு வருஷமாகச் சேர்த்து வைத்திருந்த ரூபாய் இருநூறு என்னிடம் இருக்கிறது. அதைக் கொண்டு நான் வைத்தியம் செய்கிறேன்" என்று சொல்லி விட்டு வாசலை நோக்கி விரைந்தான்.

அவள் மலர மலர ரங்கனை நோக்கி விழித்தாள். அவருக்கு எதிரே ஒரு காலத்தில் அவரிடம் வேலை செய்த ரங்கன் காணப்படவில்லை. பொற்றாளியைக் காப்பாற்றும் வகையில் எல்லாவற்றையும் அளிக்க வந்த பரம் பொருள் ஆகவே காணப்பட்டான் அவன்.

அதே சமயம் மறைந்தும் மறையாமலும் மேற்றிசையில் ஒளி வீசிக் கொண்டிருந்த பகலவன் 'பக பக'வென்று சிரித்தான். அந்த சிரிப்பில், "செல்வம் மக்களின் இதயத்தில் இருக்கும் ஈரத்தை வற்றச் செய்யும் நெருப்பு. ஏழ்மை, அந்த இதயத்தின் ஈரத்தை அமுதமாக மாற்றும் காயகல்பம். முன்னது நிலையற்றது. பின்னது அழிவில்லாதது" என்ற உண்மையைக் கண்டாள் முதலியாரின் மனைவி.

# உறுதியான எதிர்ப்பு சக்தி



## நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்




வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதன் மூலம் தேக வலிமையைப்பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் எந்த நோயும் வராமல் தடுக்கும் சக்தியை பெறுவீர்கள். நிரூபிக்கப்பட்ட குணம் பொருந்திய இந்த டானிக்கில் போஷாக்கு அளிக்கும் அம்சங்கள் ஏராளமாக இருப்பதால், உங்களுக்கு உபரியாக தேவையாயிருக்கும் உறுதியான எதிர்ப்பு சக்தியை உண்டாக்கும்.

குழந்தைகளுக்கு உடல் வலிவும் ஆரோக்யமும் அதிகரிக்க உதவுவதிலும் பிரசித்திபெற்றுள்ள இந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்டு சாப்பிட ருசியானதுங்கூட. இன்றே வாங்குங்கள்.

*தயவுசெய்து கவனிக்கவும் :*

பக்கப் படத்தில் காட்டியுள்ள லேபிளில் சிறிது மாறுதல் தற்போது செய்யப் பட்டுள்ளது. மாறுதல் செய்யப்பட்டுள்ள லேபிளில் ஒரு ஜோடி கிராஸ் ஸ்டார்ட்கள் உள்ளன. ஆனால் தயாரிப்பு முறையில் ஒரு மாறுதலும் இல்லை.

NAS. 742

# அன்பின் உருவம்

திஸ்ஸேவாசி



அவர் காரியாலயத்துக்குக் கிளம்பினர்; அவரைத் தொடர்ந்து தெரு வாசல் வரை வந்தேன்; அவர் தெருவில் இறங்கிச் சிறிது தூரம் போயிருந்தார். நான் அங்கேயே நின்று கொண்டிருந்தேன். அப்பொழுது பாஞ்சாலி என் வீடு நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

அவள் இடுப்பிலும், தலையிலும் தூக்க முடியாத சுமை யிருந்தது.

"வா, வா, பாஞ்சாலி; பதிைெரு மணி வண்டியிலே வருகிறயா! இன்று வருகிறேன் என்று ஒரு கடுதாசி போட்டிருக்கக் கூடாதோ!" என்று அவளுக்கு வரவேற்புக் கூறினேன்.

"என்னம்மா, நீங்க சொல்றது! நான் என்ன அம்மாத்திரம் பெருமைக்காரியா! வரேன்னு சொல்லி விட்டு வர" என்று கூறிக் கொண்டே அவள் கொண்டு வந்த சாமான்களை இறக்கிஞள்.

பாஞ்சாலியை உள்ளே அழைத்துப் போனேன். அவள் தான் கொண்டு வந்த சாமான்களை என் முன்னுல் வைத்தாள்.

"ஏம்மா, குழந்தைகள் சௌக்கியமா!"

"சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்! உன் பேரன், பேத்தி எல்லாம் சௌக்கியமா!"

"உங்கள் புண்ணியத்திலே எல்லாரும் சௌக்கியமா யிருக்கோம். நல்ல வேளை, கடவுள் கண் திறந்தார். ரெண்டு பெண் பிள்ளைக்குப் பிறகு, இப்போவாவது ஆண் பிள்ளை பிறந்ததே உங்களுக்கு. எனக்கு ரொம்ப சந்தோஷம்!"

"உட்காரு பாஞ்சாலி. இதெல்லாம் என்ன!"

"ஒன்றுமில்லீங்க, அம்மா. ஏதோ கையிலே கிடைத்ததைக் கொண்டாந்திருக்கேன்."

பாஞ்சாலி உட்கார்ந்து, தான் கொண்டு வந்ததைத் தனித் தனியாக எடுத்து வைத்தாள்.

இரண்டு சேர் வெண்ணெய்; இரண்டு படி கெட்டித் தயிர்; இளம் கத்திரிக்காய், வற்றல் போட; பச்சை மிளகாய் கால் தூக்கு; வாழைக்காய் ஒரு சீப்பு; இன்னும் பல இனுசு பசுமையான காய்கறி வகைகள். இவைகள் எல்லாம் அவள் வீட்டில் கிடைக்கும் பொருள்கள்தான்.

எனக்கு இவைகளைப் பார்த்ததில் வியப்பு அடங்கவில்லை. காய்ந்து, வற்றிப்போன காய்களைக் காசு கொடுத்து வாங்கியும், சாப்பிடுகிற போது திருப்தி யிருப்பதில்லை. இப்போது பாஞ்சாலி கொண்டு வந்திருந்தது பசுமை நிறைந்தது; சாப்பிட நேர்த்தியாக யிருக்கும்; மனசிலே திருப்தி நிரம்பியது. இருந்தாலும், பாஞ்சாலி, இவ்வளவு கஷ்டப்பட்டுத் தூக்கிவர வேண்டுமா!

"ஏன் பாஞ்சாலி, இப்படி கொண்டு வந்தால் தான் உனக்கு எங்களிடத்தில் அன்பிருக்கு என்று நாங்கள் தெரிந்து கொள்வோமா! உனக்கேன் இத்தனை கஷ்டம்!" என்று நான் பாஞ்சாலியைக் கடிந்து கொண்டேன்.

"என்னம்மா, நீங்க சொல்கிறது; தினமும் கொண்டு வரப் போகிறேனு! காசு போட்டு வாங்கியாந்திருக்கேனு! என் வீட்டுத் தோட்டத்தில் கிடைத்ததைத்தானே கொண்டு வந்திருக்கிறேன்" என்ருள் பாஞ்சாலி.

பாஞ்சாலியின் அன்பு உள்ளத்தை வியந்து பாராட்டத்தான் தோன்றிற்று. உறவு முறை யில்லை; அந்த அம்மாள் யாரோ!

* * *

பாஞ்சாலியோடு நாலு வருஷப் பழக்கம் தான். நாற்பது வருஷமானுலும் இத்தகைய அன்னியோன்னியம் வந்திருக்காது.

நாங்கள் அந்த ஊருக்கு மாற்றுதலாகிப் போனேம். புது ஊர்தான்; எல்லோருடனும் பழக்கம் வேண்டி யிருந்தது.

ஒரு நாள் அந்தக் கிழவி என் வீடு ஏறி வந்தாள். பாஞ்சாலிதான். "அம்மா தயிர் வேணுங்களா! வாடிக்கையாகப் போடட்டுமா!" என்று அன்பு ததும்பக் கேட்டாள்.

தயிர்க்காரி தேட வேண்டிய வேலை ஒன்று மிச்சம் என்று எண்ணி, "சரி" என்றேன்.

அவள் இரண்டணுவுக்குத் தயிர் கொடுத்தாள். இரண்டணு புது வாடிக்கை கிடைத்த உள்ளத் திருப்தி அவள் சுருங்கிய முகத்திலும் நன்ருகத்

தெரிந்தது. சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவள் போய் விட்டாள்.

மறுநாள் பாஞ்சாலி தயிருடன், வெண்ணெயும் கொண்டு வந்தாள். "அம்மா, நல்ல வெண்ணெய் ரெண்டு சேர் கொண்டாந்திருக்கேன். வாங்கிக் குங்க" என்றாள். அதுவும் அவசியமானதால், வாங்கிக் கொண்டேன்.

பாஞ்சாலி நாலு மைல் தூரத்திலிருந்த கிராமத்திலிருந்து தினமும் வந்து கொண்டிருந்தாள். காலை ஒன்பது மணிக்கு வந்து விடுவாள். அதி காலையிலேயே பழைய சோற்றை வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டுக் கிளம்பி விடுவாளாம்.

ஒரு வாரத்துக்குப் பிறகு அவள் தயிர் கொண்டு வந்தபோது, காய்கறி வகைகளும் கொஞ்சம் கொண்டு வந்ததை என்னிடம் கொடுத்தாள்.

"பாஞ்சாலி, இதற்குக் காக எவ்வளவு கொடுக்க வேணும்?" என்று கேட்டேன்.

"இதுக்குக் காக வேணுங்க. என் வீட்டுத் தோட்டத்தில் பயிரானது" என்றாள்.

"சரி; பாஞ்சாலி, மத்தியானம் சாப்பாட்டுக்கு வந்து விடு" என்றேன்.

"சரிங்க" என்றாள் அவள். தயங்கி நின்றாள்.

மத்தியானம் அவள் சாப்பிட வந்தாள். "பாஞ்சாலி தினமும் மத்தியானம் வா. ஏதோ இருக்கிறதைக் கொடுக்கிறேன். சாப்பிடு. வீணாய் வயிற்றை ஒடுக்காதே" என்றேன்.

"காலத்துக்கும் நீங்கள் இப்படிச் சாப்பாடு போடுவது, நான் சாப்பிட்டு வருவதுங்களா?" என்றாள்.

"இதோ பார், பாஞ்சாலி, உனக்கென்று தனியாக சமைக்கப் போறேனா! ஒரு பிடி அரிசி கூடப் போட்டால் போச்சு. நீ சாப்பிடத்தான் வேணும். அதனால் நான் ஒன்றும் குறைந்து போய் விட மாட்டேன்" என்று சொன்னேன்.

அவள் போய் விட்டாள்.

மறு நாள் முதல் தயிருடன், காய்கறிகள் தவறாமல் கொண்டு வந்தாள். வேறு சில நாட்களில் மற்ற மற்ற உபயோகப்படும் பொருள்களை "அம்மாவுக்கு வேண்டும் என்று கொண்டு வந்திருக்கிறேன்" என்று கொடுப்பாள். இவைகளுக்குக் காக கொடுத்தாலும் அவள் வாங்க மாட்டாள்.

"அம்மா, நான் தயிர்க் காரி. தயிர்தான் விற்கிறேன். தயிர், வெண்ணெய்க்குத்தான் காசு வாங்குவேன். அதுதான் நியாயம்" என்பாள். அதுமட்டுமல்ல. வாங்கும் பணத்துக்குத் தயிரும், வெண்ணெயும் அவள் அதிகமாகக் கொடுப்பது எனக்குத் தெரிந்தது. இதற்குப் பதிலாக அவளுக்கு மத்தியானச் சாப்பாடும், வீட்டில் செய்வதை மறக்காமல் எடுத்து வைத்திருந்து கொடுக்கவும் தான் எனக்குத் தெரிந்தது. அவள் செய்தது அவளுக்குத் திருப்தி யளித்தது. நான் செய்தது எனக்குத் திருப்தி யளித்தது.

பழகி சரியாக ஒரு மாதங்கூட ஆகி யிருக்க வில்லை. அதற்குள் பாஞ்சாலி என் மனதைக் கவர்ந்திருந்தாள். அவளை வேற்றுமையாக நான் கருதவில்லை. என் வயசைப்போல் இரட்டிப்பு வயசு அவளுக்கு. இருந்தும் இன்னதென்று விவரிக்க இயலாத அன்பு எங்களிருவரையும் பிணைத்து வைத்தது. அப்படித்தான் பாஞ்சாலியைப்பற்றி என்னால் நினைக்க முடிந்தது.

"நீங்கள் என் பெண்ணுக்குச் சமானம். குழந்தைகள் என் பேரக் குழந்தைகள்" என்று அவளும் உறவு கொண்டாடியும் பேசினாள். குழந்தைகளை எடுத்து வைத்துக் கொஞ்சினாள். "ரெண்டும் பெண்ணாய்ப் பிறந்திருக்கு. அதனால் என்னம்மா! அடுத்தது ஆண் குழந்தைதான். நான்தான் சொல்கிறேனே, பாருங்கள்" என்று சிரித்துக் கொண்டே அவள் சொன்னாள்.

"பாஞ்சாலி! பெண்ணும் வேண்டாம், ஆணும் வேண்டாம். இருக்கிறதே போதும்" என்றேன்.

"அப்படிச் சொல்லாதீங்க, அம்மா. ஆணும் வேணும். பெண்ணும் வேணும். மனசு சலிக்கப் போகக் கூடாது" என்று கூறினாள் அவள்.

நாட்கள் பறந்தன; வருஷங்கள் மூன்றுமாயின. இதற்குள் பாஞ்சாலி தன் மகள் வயிற்றுப் பேத்திக்கும், மகன் வயிற்றுப் பேரனுக்கும் கல்யாணம் செய்து வைத்தாள். பேத்திக்குத் தாயில்லை. பேரனுக்குத் தகப்பனில்லை. இருவருமே அவள் வளர்ப்பு. அவர்களிடம் உயிரை வைத்திருந்தாள். அவர்களுக் காகவே ஆடி ஓடி சம்பாதித்து வருவதாகச் சொன்னாள்.

கல்யாணத்துக்குப் பிறகு பேரன் தகராறு பிடித்தான். அவள் சம்பாதிக்கும் பணம், இருக்கும் நிலம் எல்லாம் தனக்குத்தான் சேர வேண்டும் என்று வம்பு பண்ணினான்; அவளுக்கு இதனால் மனம் உடைந்து போயிற்று.

"இந்தப் பிள்ளை பண்ணுவதைப் பாருங்க அம்மா. இருப்பதைப் பேத்திக்கும் பேரனுக்கும் கொடுக்கணும் என்று இருந்தேன். அதற்குள்ளாக அவசரப்படுகிறான்" என்று வருத்தப் பட்டாள். அவனுக்குப் பயந்து, நிலத்துப் பத்திரம், கையிலிருந்த நகை, பணம் எல்லாவற்றையும் ஒரு சிறிய பெட்டியில் போட்டு, "அம்மா இது இங்கேயே இருக்கட்டும். வேணும்போது எடுத்துக் கொள்ளுகிறேன்" என்று



பம்பாய் சென்ட்ரல் ரயில்வே பிரதம டிராபிக் மானேஜர் ஸ்ரீ எம். ஜி. அய்யர் அவர்களின் புதல்வி குமாரி லக்ஷ்மியின் நடனம் சமீபத்தில் மாதுங்காவில் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி பரத நாட்டிய கலா மந்திரத்தின் ஆதரவில் வெகு சிறப்பாக நடந்தேறியது. பம்பாய் பிரமுகர்கள் விஜயம் செய்து குமாரி லக்ஷ்மியின் நடனத்தைப் பெரிதும் ரசித்தனர்.

எங்கள் வீட்டில் கொண்டு வந்து வைத்தாள். இன்னும் சில சமயத்தில் ஐம்பதோ, நூறோ கொண்டு வந்து கொடுத்து "இதை வைத்திருங்கள். பிறகு வாங்கிக் கொள்கிறேன்" என்பாள்.

அவளிடமிருந்து வாங்கி வைக்கும் பணம் குடும்பச் செலவில் கரைந்து போகும். அதைத் திருப்பிக் கொடுக்கும்போது திகைத்துத் திண்டாடிப் போவோம். மறுமுறை இம்மாதிரி கொடுக்க வரும்போது "வேண்டாம். எங்கள் கையிலிருந்தால் செலவாகிப் போய்விடும்" என்று சொல்லத்தான் தோன்றும். அப்படிச் சொல்லவும் முடியவில்லை. பணத்தைப் பார்த்ததும் தேவைதான் பெரிதாகத் தோன்றும்.

பிறகு ஒரு நாள் "எல்லாம் சரியாய்ப் போய் விட்டது அம்மா. பேரன் வழிக்கு வந்துவிட்டான். இனிமேல் வம்பு தும்பு பண்ண மாட்டான்" என்று பெட்டியை எடுத்துப் போனாள். ஆனால் பணத்தைக் கொடுத்து வைத்திருந்து வாங்கிப் போவதை மட்டும் அவள் நிறுத்தவில்லை. இது எங்களுக்குப் பெருத்த உதவியாக இருந்தது.

இப்படி பாஞ்சாலி எங்கள் குடும்பத்தில் ஒருத்தியாகவே ஆகிவிட்டாள். அவளைத் தயிர்க்காரி என்று நாங்கள் நினைக்கவில்லை. ஒவ்வொரு நாளும் அவளை எதிர் பார்ப்பதே எனக்கு வழக்கமாகி விட்டது. அவள் என்றைக்காவது வராவிட்டாலோ, அவளோடு சிறிது நேரம் பேசா விட்டாலோ எனக்குப் பொழுது போகாது.

அவர்கூட பாஞ்சாலியிடம் அன்புடனும், பரிவுடனுமிருந்தார். "பாவம், நல்ல கிழவி. இன்னும் கஷ்டப்படுகிறாள். இவளைப் போல நான் இதுவரை யாரையும் பார்த்ததில்லை" என்று அவளுக்காக இரக்கம் காட்டுவார். அவளைப் பற்றி நாங்கள் நினைக்காத நாளில்லை.

**வ**ருஷங்கள் நான்கு ஓடிவிட்டது. அவருக்கு வேறு ஊருக்கு மாற்றுதலாகி விட்டது.

இதையறிந்த பாஞ்சாலியின் முகம் தொங்கி விட்டது. அவள் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. "அம்மா, நீங்கள் போய் விட்டால், நான் எப்படியம்மா இருப்பேன்! உங்களையும், குழந்தைகளையும் பார்க்காமல் என்னால் இருக்க முடியாதே. உங்கள் குணமும், ஐயா குணமும் யாருக்கு வரும்! வீடு வீடாகத்தான் வாடிக்கை கொடுக்கிறேன். யாரும் உங்களைப் போல் ஆக மாட்டார்கள். நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்" என்று கூறினாள் அவள். அழுகையை அவளால் அடக்க முடியவில்லை.

"பாஞ்சாலி, அழாதே! பழக வேண்டியதுதான். அதனால் பிரியாமலும் இருக்க முடியாது. எங்கள் பிழைப்பே ஊர் மாறி ஊர் போகவேண்டியதுதான். ஒருத்தரை ஒருத்தர் ஞாபகம் வைத்துக் கொண்டால் போதும். அன்பு மறக்கக் கூடாது. அவ்வளவுதான்" என்றேன். என் உள்ளத்தையும் வருத்தம் விழுங்கியது.

நாங்கள் கிளம்ப மூன்றே நாட்கள் இருந்தன. அதற்குள் நல்ல விருந்தாகவே செய்து, பாஞ்சாலிக்குப் படைத்தேன். "அம்மா, இப்படி எல்லாம் என்னால் சாப்பி...



★



இந்த மாத முதல் வாரத்தில் கொழும்பு ஸ்ரீ ராமகான சபையார் ஸ்ரீ ராமநவமி உற்சவத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். இந்த விழாவில் இந்தியர்களுடன் யாழ்ப்பாணத்து ஆஸ்திகர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

---

இடத்திலும் வாழலாம். உனக்குக் குறைவு ஒன்றும் வராது" என்று ஆறுதல் கூறினேன்.

கடைசி நாளும் வந்தது.

பாஞ்சாலி என் மூத்த பெண் கையில் ஒரு வெள்ளிக் கிண்ணத்தைக் கொடுத்தாள். குழந்தைகளை அணைத்து உச்சி முகர்ந்து முத்தமிட்டாள்.

"பாஞ்சாலி! இதெல்லாம் எதற்கு! உன் அன்பு இருந்தால் போதாதா!" என்றேன்.

"இந்த ஏழையின் ஞாபகமாக இருக்கட்டும், அம்மா! நான் குழந்தைகளுக்கு வேறு என்ன கொடுக்கப் போகிறேன்!" என்றாள்.

"பாஞ்சாலி! யார் யாருக்கு என்ன கொடுக்க முடியும்! நீ நல்லா இருந்தால் போதும், போய் வருகிறேன்" என்று அவளிடம் விடைபெற்றேன்.

"அம்மா. பிறக்கப்போவது ஆண் குழந்தைதான். கடுதாசி போடுங்க, குழந்தையைப் பார்க்க வருகிறேன்" என்றாள் அவள்.

போகும்போது அந்த அன்பின் உருவம் பாஞ்சாலியைப் பார்க்கும்போது, என்னால் அழாமலிருக்க முடியவில்லை. "அவளைப் போல், சொந்தத்தில் யாரும் அன்பு செலுத்தவில்லை. என்னிடம் அவ்வளவு பிரியம் வைக்கவில்லை" என்ற எண்ணத்தோடுதான் இங்கு வந்து சேர்ந்தேன்.

* * *

**பா**ஞ்சாலி ஆசீர்வதித்தபடி ஆணாகப் பிறந்தது. குழந்தையைப் பார்க்கத்தான், சிரமம் பாராது, அம்மாவுக்குத் தேவையானதை மூட்டை கட்டிக்கொண்டு வந்திருந்தாள் அவள்.

பாஞ்சாலி முன்னைவிட, எனக்குப் பன்மடங்கு உயர்ந்து காணப்பட்டாள். என் உள்ளம் உணர்ச்சியினால் நிரம்பியது. உழைக்கப் பிறந்திருந்த அவளுக்காக என் இதயம் இரங்கியது.

அவள் மூன்று நாட்கள் தன் குடும்பக் கவலை, வியாபாரம் எல்லாவற்றையும் மறந்து விட்டு, எங்களோடு தங்கினாள்.

நாங்கள் வந்த பின் நடந்த அவள் குடும்பத்துக் கதையைச் சொன்னாள். நாங்கள் குடியிருந்த வீட்டைப் பார்க்கும் போதெல்லாம் தனக்கேற்பட்ட ஏக்கத்தையும், ஏமாற்றத்தையும் திரும்பத் திரும்பச் சொன்னாள். மறுபடியும் அதே ஊருக்கு மாற்றிக் கொண்டு வந்துவிடக் கூடாதா என்று ஆவலோடு கேட்டு விட்டாள்.

பழங் கதைகளைப் பேசிப் பேசி மூன்று நாட்களையும் கழித்து விட்டாள். நான்காம் நாளே அவள் ஊருக்குக் கிளம்ப ஆயத்தமானாள்.

அவர் அவளுக்கென்று ஒரு நல்ல சேலையும் அவள் கைச் செலவுக்குப் பத்து ரூபாய் பணமும் கொடுத்துவிட்டுக் காரியாலயத்துக்குப் போனார்.

பாஞ்சாலி ஊருக்குப் போகும்போது இரண்டையும் அவளிடம் கொடுத்தேன்.

"இதெல்லாம் எதற்கு, அம்மா! நீங்க நல்லபடியாக இருக்கணும். அதுதான் எனக்கு வேண்டும்" என்று தழுதழுத்த குரலில் சொன்னாள்.

"ஆண் குழந்தை பிறந்ததற்கு உனக்குப் பரிசு. அவர் கொடுக்கச் சொன்னார்" என்றேன்.

"சரி, அம்மா, போய் வருகிறேன், கடிதாசி போடுங்கள்" என்றாள் அவள்.

"பத்திரமாய்ப் போய்ச் சேர், உனக்கு ரொம்ப சிரமம். அடிக்கடி வந்துவிட்டுப் போ" என்று நான் சொன்னேன்.

"அதற்கென்னம்மா, வர முடிந்தால் வருகிறேன். அப்படி வர முடியாவிட்டாலும், அடுத்த குழந்தையைப் பார்க்க வராமலிருக்க மாட்டேன். நீங்க மகராசியாய் இருக்கணும்" என்று அவள் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினாள்.

பாஞ்சாலி போனவள்தான். பிறகு வரவில்லை. எப்போதாவது, யாரையாவது விட்டுக் கடிதம் எழுதிப் போடுவாள். அவளை மறுமுறை ஒரு தரம் பார்க்க என் ஆவல்தான் அதிகரித்தது.

ஐந்து வருஷங்களுக்குப் பிறகு அடுத்த குழந்தை பிறந்தபோது, அந்த அன்பின் உருவம் பாஞ்சாலி இந்த உலகத்திலேயே இல்லை. அவளை என்னால் மறக்க முடியவில்லை. அதனால் என் குழந்தைக்குப் பாஞ்சாலி என்று பெயர் சூட்டி மகிழ்ந்தேன்.

---

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது



டால்டாவிலிருந்து பெறும் சக்தியால் இவன் ஆரோக்கியமாகவும் நாள்முழுவதும் குதூகலமாகவும் இருக்கிறான்.

உங்கள் குடும்பத்தினருக்கு டால்டாவில் தயாரித்த உணவை அளியுங்கள். இப்படிச் செய்வதால், டாக்டர்கள் ஒவ்வொருவர் தினசரி உணவிலும் அவசியம் தேவை என்று கூறும் சக்தியளிக்கும் கொழுப்பு அவர்களுக்குக் கிடைப்பதை உறுதிப்படுத்திக் கொள்கிறீர்கள். காற்றுப்புகாத சீல்செய்த டின்களில் அடைக்கப்பட்ட டால்டா மிகவும் சுத்தமானது, புதிதானது, ஆரோக்கியமானது. மேலும் மிகவும் சிக்கனமானது.

**நமது உணவில் விடமின்கள் ஏன் அடங்கியிருக்க வேண்டும்?**

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:

தீ டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




# டால்டா

**உங்களை ஆரோக்கியமாக வைத்திருக்கும் சமையல்-கொழுப்பு**

10, 5, 2, 1, பவுண்டு டின்களில் கிடைக்கிறது

HVM. 190-50 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

